உ

பரமபதி துணை.

# யாகோபு

வகாரக் களங்கு என்னும்

# வாத வைத்தியம் 300.

மு. குழந்தைவேலுப் பிள்ளையவர்கள்
ஏட்டுப் பிரதியைவைத்து

மதுரை வித்துவான்
த. குப்புசாமி நாயுடு அவர்களால்
பரிசோதித்த பிரதிக்கிணங்க

மதுரை புதுமண்டபம் புத்தகஷாப்
இ. ராம.
## குருசாமிக் கோனார் சன்
அவர்களாற்றமது

மதுரை வடக்குமாசி வீதி குருசாமிக்கோனார் சந்து
ஸ்ரீ ராமச்சந்திர விலாசம் பிரஸில்,
பதிப்பிக்கப் பெற்றது.



இதன் விலை 1948. ரூ 1—8—0

பி. ஐ. சி. எம் டி. நிர். 104. காப்பி 382. 17—2—48.

உ
பரம்பதி துணை.

# இராமதேவரென்ற யாகோபு இயற்றிய

## சாஸ்திரங்களின் விபரம்.

| | | | |
|---|---|---|---|
| வைத்திய சிந்தாமணி | 700 | வகாரக் களங்கு | 300 |
| ஷை குருநூல் | 55 | ஷை பஞ்சமித்திரம் | 300 |
| சுண்ணக்காண்டம் | 600 | ஷை தண்டகம் | 110 |
| ஷை சுண்ணம் | 300 | ஷை சூஸ்திரம் | 55 |
| ஷை சுண்ணசூஸ்திரம் | 155 | ஷை இடைபாகம் | 16 |
| ஷை சூஸ்திரம் | 55 | ஷை செய்பாகம் | 16 |
| லோகச்செந்தூரம் | 300 | வைத்ய வாதசூஸ்திரம் | 400 |
| ஷை செந்தூர சூஸ்தி | 150 | ஷை வைத்தியம் | 300 |
| ஷை சூஸ்திரம் | 55 | கல்லாடமும் சாஸ்திரம் க்கும் அரும்பத உரையும் | 17 |

ஆக மொத்தம் 17 சாஸ்திரங்கள். புத்தகம் 12.

மேற்கண்ட சாஸ்திரங்களை பன்னிரண்டு புத்தகங்களாக அச்சிட்டு தனித்தனியாகவும் மொத்தமாய் ஒரே கோர்வையாகவும் பயிண்டு செய்திருக்கிறது தேவையுள்ளவர்கள் நேரிலும் வீ பீ தபால் மூலமாகவும் பெற்றுக்கொள்ளலாம்.

**6. இராமசாமிக்கோன்**

புக்ஷாப் புதுமண்டபம், மதுரை.



உ

பரமபதி துணை.

· யாகோபு வகாரக் களங்கு

என்னும்

# வாத வைத்தியம் 300.



சிறந்திருந்த மூதற்பொருளை யழிவில்லாத
சித்திதரு மணியைநான் தெரிந்துமுக்கால்
துறந்துமனு தினமுமடி யிணையைப்போற்றித்
தொல்லுலகில் வைத்திபர்கள் பிழைக்கவேண்டி
பிறந்தபல வுயிர்கள் நசல் தீரவேண்டி
பிரியமுடன் கைபாகம் விபரமாகக்
கறந்தாவின் பால்போலக் கருணைகூர்ந்தேன்
கருத்தறிந்தோர் மூந்நூற்றைக் கருதுவாரே. (1)

கருதியே கர்த்தனைத்தான் துதியேசெய்து
கனமான ரசவாதங் கண்டு தேறி
உறுதியா யுலகத்தோர் சித்தராக
உண்மையா யெழுநூற்றையெடுத்துச்சொன்னேன்
வருதியாய் கைபாக வரிசைதன்னை
வழுத்தினேன் சொச்சமதை யிதிலேசொன்னேன்
பருதிமதி யுலகத்திற் புத்தியுள்ளோர்
பக்குவமாய்க் கண்டுகொள்வர் பாக ந்தானே (2)

கண்டுமே மக்காவின் தேசம்விட்டுக்
கலிமாவுங் கண்டுநான் கீழ்தேசத்தில்
தொண்டுபட்ட லாயில்லா யில்லல்லாகூ
துணையாகப் பத்தியுடன் வழியேசென்று
பண்டுவரும் முன்கதைகள் பேசிற்றனும்
பதிவாக முகம்மதுவைப் பணிந்துபோற்றி
உண்டுமுனி யோர்கள்ரச வாதஞ்சொன்னர்
உற்றுணர்ந்து யாகோபு உரைசெய்தேனே.

உரைசெய்தேன் யானுமந்த வாதம்பார்த்தேன்
உறுதியதை யுலகத்திற் சொன்னேன்யானும்
கரைகண்டேன் எங்கள்குலந் தேவராச்சு
கற்றுணர்ந்து மூகம்மதுவின் மார்க்கத்தேகிக்
குறைவில்லா ரசவாதங் குணமதாகக்
கூர்மையாய்ப் படிகேசரத்திற்புக்கிப்
புரையான வழிதனிலே யேறியானும்
புக்கினேன் பதவிதனிற் புகுந்திட்டேனே (4)

புகுந்திட்டேன் மக்காவின் தேசந்தன்னிற்
புகலரிய பெரியோர்கள் மெத்தவுண்டு
வகுந்திட்ட வாதங்கள் மிகவுஞ்சொன்னார்
வகையான குளிகைமுதற் கண்டுதேறி
உகுந்திட்ட பதினெட்டுப் படியில்யானும்
உற்றுமே யீராறு படிகளேறிப்
பகுந்திட்டேன் யிறகூலுங் கண்டாரப்போ
பக்குவமாய்க் கைகொடுத்தார் பதவியாமே. (5)

பதவியாய் ஆதிமறை வேதம்நாலும்
பகுத்துணர்ந்து சாஸ்திரமுஞ் சொன்னாரப்போ
உதவியாய்ப் பொதிகைதனில் வாழுகின்ற
உறுதிபெற்ற கும்பமுனி யருளைச்சொன்னார்
சதமான தேவரிஷி சித்தர்தம்மைத்
தான்தேடி யவர்களையுங் கண்டுதேறி
முதலான பருதிமதி சுழியைநாடி
முடிவான சிவனுமையும் பாதிகண்டேன் (6)

கண்டுமே சாஸ்திரங்க ளனந்தமுண்டு
கருவறியா மடையர்மெத்தக் கனிவில்லாதார்
தொண்டுபட்ட சாஸ்திரங்கள் பாடம்பண்ணித்
தொல்லுலகிற் சொல்லுவா ரறியாமூடர்
பண்டுபழங் கதைசொல்வார் மயங்கிவீழ்வார்
பதிவான நிலைதவறி மாயைபூண்டு
வண்டுபோற் கீதங்கள் பாடுவார்பார்
வகையான சாஸ்திரத்தைப் பாரார்பாரே (7)

சாத்திரமுஞ் சூத்திரமும் பார்த்துத்தேறு
சரியாகும் பொருளெல்லாம் வந்துகூடும்
பாத்திரமும் நூலிருந்தோர்க் கடிமைசெய்து
பதிவான அவர்பதத்தில் வீழ்ந்துவாங்கி
கோத்திரமும் நிதியதுவும் பெருகவேண்டிக்
குணமாகச் சித்தருக்குக் கூர்ந்துபாதம்
தோத்தரித்து மனதுதனில் தொழுதுபோற்றித்
தொல்லுலகில் மூந்நூற்றைத் தோய்ந்துபாரே (8)

அயச் செம்பு

தோய்ந்துரவி தானெடுத்து யிடைகருப்பி
தொக்கநிறு சத்தியது ரெண்டிலொன்று
ஆய்ந்துபழச் சாறுவிட்டு அரைநேர்சாமம்
அதைக்கதிரி லிட்டுமொரு புடமுமிட்டுப்
பாய்ந்துகொடி யோனிறுத்துப் பாதிசேர்த்துப்
பகரிலிரு புடமேதான் செம்புமாகும்
ஆய்ந்துயெடு குகையிலிட்டு உருக்கச்செம்பாம்
அதிகசுயச் செம்பாம்நல் லிரும்புதானே (9)

செந்தூரம்.

நல்லிரும்பு செம்புதனை நீயெடுத்து
நாடியிடு யிதுநேரே யேமந்தானும்
சொல்லினிய நையவடி சத்திவீரம்
சுருக்கஅரைத் தகட்டிடையாம் பூசிப்பூசிக்
கொல்லவதைப் புடம்போடக் கருப்பதாகும்
கொடியோனைச் சேர்த்தரைத்துப் புடமுமிட்டால்
வல்லமையாய் முருக்கம்பூப் போலாஞ்செம்பு
வழியறிந்து மதிதங்க வழிசொன்னாரே (10)

தங்கச்செந் தூரமதை மதியிற்பத்துத்
தாக்கிடவே ஒன்றுகொடு மாறவேமம்
செங்கையினு லெடுத்துவித்து ஞானம்பாரு
செல்வம்வரும் யாவருக்குஞ் சொல்லிடாதே
கொங்கணவர் கைபாக மிதுதான்பார்த்துக்
கொண்டாக்கால் சித்தியாங் குணமுமாகும்
மங்கைமே லாசைகொண்டு மயங்காதென்று
மதிப்புறுசெந் தமிழாக வழுத்தினாரே (11)

அயச்செம்பு

செந்தயினி யிடைசேரு சத்திதன்னைச்
சித்திபெற அரைத்துருக்கு சத்துமாகும்
மூந்தயிடு கல்வத்தி லிட்டுடைத்து
முத்திபெறக் கொடியோனைப் பாதிசேர்த்துச்
சந்ததமுன் னீரதனு லரைத்துக்கட்டித்
தாட்டியாய் மூடுபுடம் போடச்செம்பாம்
பந்தவினை தீரும் யாகோபுசொன்ன
பதியரசர் போலிருக்க நாடுவாயே (12)

நாடுநபி அயச்செப்பு செய்துவித்து
நலமான சிவனங்கள் பண்ணித்தானும்
பாடுபெறத் தேசங்கள் மிகவுஞ்சுத்தி
பருதிமதி யுலகெல்லாங் குளிகையிட்டு
மேடுபெற மக்கத்திற் சென்றுபுக்கி
மேலான பெரியோர்கள் நீதிதன்னை
வீடுபெற ஆராய்ந்து பேருங்கேட்டேன்
மெய்தெரிந்து யாகோபு செப்பினேனே (13)

செப்பியதோர் சாஸ்திரங்க ளெல்லாமெய்யாம்
சித்தர்நூ லாராய்ந்து பாரார்க்கில்லை
ஒப்பினதோர் மனக்குரங்கோ ஏன்றேட்டாது
உறுதிவைத்து யேறினுற் றள்ளிப்போடும்
உப்பினதோர் சிவன்விட்ட மாடுபோலே
உற்றுமே சாஸ்திரத்தைப் பார்த்துப்பார்த்து
தப்பிதமாய்ச் செய்துமே தவித்துநொந்து
தாட்டிகமாய்ச் சொல்வார்கள் அழும்பர்தானே (14)

அழும்பாக வுப்பைவிட்ட ஞானிதானும்
அவமானப் பட்டுமே அலுத்துச்செத்தான்
கழும்பான செம்பைத்தான் கொல்லவாதி
கவிழ்ந்துமே வெகுபணங்கள் தோற்றுக்கெட்டார்
பழிபாவம் மனதுதனி லெண்ணுவாதி
பகைத்துமே உலகத்தில் மனிதர்பேச்சைத்
தழும்பாகச் சிரிக்காதே தான்கேட்டப்போ
தாட்டிகமாய்க் கேட்டுமவர் தவித்தார்தானே (15)

தானென்ற யாகோபு சொன்னவாதம்
தக்கதொரு பாகமதைக் கண்டுதேற
ஊனென்ற உலகத்தோர்க் கெதிரியாக
உண்மைரச வாதமது யெளிதிற்காண
வானென்ற ஞானங்கள் மிகவுந்தோண
வழுத்தியே யெப்பொருளும் விளங்கவென்று
கானென்ற குளிகைமுதற் சென்றுதங்கள்
கருதியே பார்த்தாக்கால் தோணும்பாரே (16)

தோணவே துருசுவிட்டாற் சத்தேயில்லை
தொல்லுலகிற் செம்பில்லை கருதிப்பாரு
வாணவே அயச்செம்பு மார்க்கமில்லை
வடிவான சுண்ணவகை வலுமையில்லை
ஈணவே தாயில்லாப் பிள்ளையில்லை
இதமாக யிப்படிக்கே யெல்லாம்பாரு
நாணவே நாடுதனில் வாதிமார்கள்
நலமிலாப் பாகமதைச் செப்புவாரே (17)

வங்கச் செம்பு.

செப்புவா ரின்னமொரு களங்குகேளு
செல்வம்வரு மிதைக்கருதிச் செம்பாய்ப்பாரு
அப்புடனே தனைக்குகையில் வைத்துருக்கி
ஆடிவரும் வேளைதனில் நாலுக்கொன்று
தப்புவார் சூதமது சேர்த்துருக்கி
தடையறவே கல்வத்திற் பொடியாய்ப்பண்ணி
நப்புடனே நிறுத்துயெடு ஒட்டிரெட்டி
நலமாகக் கூத்தனைத்தா னிறுத்துக்கொள்ளே (18)

நிறுத்தெடையிற் பாதிதான் சத்திசேர்த்து
நேராக முன்சாறு தன்னலாட்டிப்
பொருத்துகதிர் காயவைத்துப் புடமுமிட்டால்
பொங்கியது கரிபோலத் தானிருக்கும்
கருத்தகுகை தன்னிலிட்டு வுருக்கிப்பாரு
கசடற்று வெள்ளிபொன்போற் கண்விட்டாடும்
பருத்துயெடு கல்வத்தி லிட்டு நீயும்
பதிவாக யாகோபு பயின்றவாறே. (19)

வாறுடனே கொடியோனைப் பாதிசேர்த்து
வண்மைபெற அரைத்துவில்லை காயவைத்து
தேறுபடப் புடம்போடச் சிவப்புமாகும்
திட்டமாய்ப் போட்டெடுத்தே உருக்கச்செம்பாம்
கோறுபட மதியெட்டி லிரண்டுசேரு
கொடியதொரு காஞ்சனந்தா னிரண்டுசேர்த்து
தாறுபட வுருக்கிப்பார் யேமமாகும்
தாட்டிகவான் யாகோபு சொன்னவாறே (20)

சொன்னதொரு செம்பைமுந்திப் பண்ணிக்கொண்டு
சுருதியுறச் சீவனங்க ளதிலேபண்ணி
நன்னயமாய்ச் செலவுக்கு வைத்துக்கொண்டு
நாதாந்த ஞானத்தை மிகவேபார்த்து
வின்னமில்லா யோகமது தானேசெய்து
வியப்பாகக் கைமுறைக ளதிலேபண்ணி
பன்னகமாய் வாழ்கயா கோபுசொன்ன
பதிவான சுருதிதனைப் பார்த்துத்தேறே (21)

பார்த்திடவே ஒளிவாகும் ஒளிவுதன்னைப்
பத்தியாய்க் கண்டுசுழி தன்னிலேறி
எத்திடவே குதிரைக்கோர் மையம்பூட்டி
எத்திசையும் வாழ்ந்துமிக யோகம்பார்த்தால்
கோத்திடவே மேனியது யிருகிப்போகும்
குணமாகும் மணமாகும் கூர்மையாகும்
நாற்றிசையு மெய்த்திடவே ராஜயோகம்
நாடிவரும் மிந்நூலை நயந்துபாரே (22)

நயந்துமே நூலிருந்த யிடமறிந்து
நலமாக வாங்கிவந்து மடித்துநீயும்
பயந்துமே அடிதலையும் ஒத்துப்பார்த்தால்
பதிவான பாகமெல்லாம் அறிவிற்றேறு ணும்
உயர்ந்துமே தங்கமெல்லாம் எளிதிலாகும்
உறுதியிது யாகுநபி உண்மைசொன்னார்
அயர்ந்துமே போகாமல் வாசியோகம்
அடிதொட்டு நுனிமட்டும் பார்த்திடாயே (23)

பார்த்திடவே வாதசித்தி வந்துதானால்
பதிவான யோகசித்தி க்ஷணத்திலாகும்
ஏத்திடவே களங்குதனைச் செந்தூரித்தால்
இரும்பான செம்பெல்லாம் எளிதிலாகும்
போற்றிமன மகிழ்ந்திடுவார் பூலோகத்திற்
புகழ்பெரிய தெல்லாரும் புதுமைசொல்வார்
ஏற்றினதோர் தீபத்தைக் கண்டபோது
எளிதான இருளகலும் இன்பம்பாரே. (24)

இன்பமாய்ப் பெரியோர்க ளுண்ணும்உக்கா
இயல்பாக வாங்கியே குகையிலிட்டுத்
தென்புடனே உருக்கியபின் சாரம்போட்டுத்
தெளிவாக மிலுப்பைநெய் தன்னிற்றுனும்
அன்பாக யிருபத்தோர் தாமேசாய்க்க
அதிலிருக்குங் கண்ணதுவுஞ் சிறுகண்ணுகும்
முன்பாக யெடுத்து நிறு பலமும்நாலு
முத்திதருஞ் சிவவிந்து பலமூங்காலே (25)

காலாகத் தானிறுத்து உருக்கிக்கல்வம்
கருத்துவைத்து உடைத்தபின்பு கருதக்கேளு
நூலாக நீர்பூத்தன் ஒட்டிரெட்டி
நுணுக்கமாய் நிறைசேர்மூன் பழச்சார்விட்டு
ஏலாக அரைத்துரவி காயவைத்து
இயல்பாகக் குக்குடத்திற் போட்டுக்கல்வம்
நாலாக யிட்டிடயாக் கோபுதானும்
நலமதனைச் சொல்லுகிறேன் நாடிக்கேளே (26)

நாடியே நிறுத்தயிடை பாதிதாரம்
நலமாகச் சேர்த்துஅரை மூன்சார்தன்னிற்
கூடியே வில்லைதட்டிக் கதிரில்வைத்துக்
கொக்கினுட புடம்போட்டுக் கல்வமிட்டுப்
பாடியதோர் கொடியோனைப் பாதிசேர்த்துப்
பதிவாக அரைத்திடவே கையர் நீரால்
வாடியே வில்லைதட்டிக் கதிரில்வைக்க
வளம்பெறவே யாகோபு வழுத்தினரே (27)

வழுத்தியே புடமிடவே சிவக்கும்வில்லை
வடிவாக யெடுத்துடனே காரங்கூட்டி
அழுத்தயா யுருக்கிடவே ரவியுமாகும்
ஆண்மையுள்ள செம்பதுவைத் தியானம்செய்து
பழுத்திடவே உருக்கியிடை தங்கஞ்சேரு
பதிவான யேமமாய்ப் பாரிலோர்க்கு
உழுதிட்டுப் பயிரிட்ட வாறதாகும்
உண்மையா யாகோபு ஓதினேனே. (28)

ஓதியதோர் மக்காவின் தேசந்தன்னில்
உறுதிபெற்ற நபிமார்கள் மெத்தவுண்டு
வாதியவ ரெல்லோரும் ஏமஞ்செய்வார்
வாய்பேசார் கேட்டாலுஞ் சொல்லமாட்டார்
சாதிபல பேருடனே சொல்லுவார்பார்
தன்மையவர் கோபந்தான் மெத்தவுண்டு
கோதிலா மனதுவர நடந்துகொண்ட
குற்றமில்லா யாகோபு கூறினரே. (29)

கூறிவிட்டார் யாகுநபி கேட்டுக்கொண்டு
குணமாக யென்பேரு விளங்கத்தானும்
பாரிட்ட வுலகிலெழு நூறுதானும்
பாடியபின் மூந்நூறு பாடிச்சென்று
கோலிட்ட களங்கோடு செந்தூரங்கள்
கொட்டினேன் குணமாகக் கூர்ந்துபார்த்து
நீறிட்ட திருமதில்போல் காட்டினேன்பார்
நீனிலத்தில் நிசயாகக் கறைகண்டேனே. (30)

கறைகண்டன் பலயெடுத்துக் கரியிலிட்டுக்
கடுமைபெற வூதிடவே சலவையாகும்
மறைகண்டன் நாவிலொன்று வன்னிகெற்பம்
மதிமயங்கிப் போகாமற் கல்வத்திட்டுச்
சிறைகொண்ட பாவனைபோ லரைக்கமுன்னீர்
சித்திரமா யரைத்துவில்லை கதிரிற்காய்ந்து
துறைகண்டு புடம்போட்டுக் குகையிலிட்டுத்
தூக்கிமெள்ள உருக்கிடவே சத்துமாமே. (31)

சத்தான சத்தைத்தான் உடைத்துப்பார்க்கச்
சரிவரவே வெங்கலம்போற் ருனுமாகும்
மூத்தான் ததுபோலாங் கல்வத்திட்டு
முடிவாகக் கொடியோனை முழுக்கவிட்டு
பத்தான நாழிகைதா னரைத்துவில்லை
பதிவாகக் கதிரில்வைத்துப் புடத்தையிட்டு
செத்தானைப் பார்த்தாக்கால் சிவப்புமாகும்
செப்பினுர் யாகோபு செல்வந்தானே. (32)

செல்வமதாஞ் செந்தூரம் நாலுக்கொன்று
சேர்த்துருக்கக் காரத்தைச் செம்புபோலாம்
மல்கவே சோதிரவி தன்னைத்தானும்
மார்க்கமா யெடுத்துயிதில் நாலிலொன்று
நல்கவே யேமமிட்டு உருக்கிப்பின்பு
நன்ருகத் தகடடித்து நாதவீரம்
மெல்கவே யரைத்துமே கவசங்கட்டி
மெதுவாகப்போடுமெனச்சொன்னேன்யானே. (33)

சொன்னதிரி புடம்போடக் களங்கதாகும்
சுகமயமாங் கொடிச்சியைத்தான் பாதிசேர்த்து
நன்னயமாய் மூச்சாமம் முன்னீராலே
நாடியரைத் தேவில்லை கதிரில்வைத்துப்
பின்னமில்லா மற்ருனே புடமூன்றிட்டால்
பிலக்குமே செம்பாகும் பெருமைரெம்ப
கன்னல்போல் ருசியாகும் வாதப்போக்கு
காட்டினுர் யாகோபு கருத்தாய்த்தானே. (34)

கருத்திலுறை செந்தூரம் மதியிலிட்டுக்
கனமாக நிறுத்திரண்டு கொடுத்துருக்கு
வருத்தமில்லா மாத்தெட்டு ஆணிக்கொக்கும்
வடிவாகப் புடமிறங்கும் வண்மையோர்க்கு
திருத்தமிலா யிப்பொருளை வித்துத்தானும்
திட்டமா யுண்டுடுத்தி யோகப்பாரு
பொருத்தமுடன் ஞானவழி கூடுமென்று
பொருளையுள்ள யாகோபு சொன்னுர்தாமே. (35)

சொன்னதிந்த முந்நூறிற் களங்கம்பண்ணு
சுருதியொடு செந்தூரஞ் செய்தாயானல்
கன்னல்பெறச் செம்பாகும் தங்கஞ்சேர்த்துக்
கருத்துறவே செந்தூரம் பண்ணிக்கொள்ள
இன்னிலத்தில் ராஜயோ கத்தைத்தானும்
இதமாகப் பெறுவீர்க ளிதமாய்ச்சொன்னேன்
தன்னகரிற் சித்திபெற்று வாழ்வீரென்று
சாற்றினர் யாகோபு தன்மைதானே. (36)

தன்மையென்ன வுலகத்தில் வாதிதானும்
தாக்கிடவே களங்குசெய்து லோகத்துள்ளே
உண்மையாய்க் கொடுத்துருக்கி யூதும்போது
ஊதிரியாய்ச் சிதறிவிடும் வர்ணம்போகும்
வண்மையாய் வாதம்பொய் யென்றுசொன்ன
மார்க்கமதுக் கென்செய்வேன் தேங்காய்தன்னைப்
பெண்மையாய் நாயுருட்டும் வாறுபோலே
பேசினர் யாகோபு பெருமைதானே. (37)

பெருமையாய் உப்பறிந்த வாதிதானும்
பேருலகிற் செம்பெடுத்து வேதைபார்ப்பார்
அருமையா யவர்சொல்ல மாட்டாரையா
அடைவாகக் காணது வாதந்தானும்
உருமையாய்ச் சொல்லியே புலம்புவார்கள்
உற்றுணர்ந்து யாகோபு வுறுதிசொன்னர்
மருமையாய்ச் சொன்னலுந் தெரியாமூடர்
மதியாகக் காணர்கள் மடையர்தானே. (38)

மடையனுய்ப் போகாமற் செய்பைப்பாரு
மார்க்கமாய்ச் சீவனங்கள் பண்ணலாகும்
கடையராய்த் திரியாமல் வாசியோகம்
கற்றுணர்ந்து பதவிதனிற் கருத்தையுண்ணு
தடையாகச் சொல்லாதே வாதந்தன்னைத்
தாட்டிகமாய்க் கைபாக வரிசைபாரு
கொடையாக வேயானு மனேகம்போக்கு
கொட்டினேன் யாகோபு குறிப்புப்பாரே. (39)

குறிப்பாகச் செய்துபார் பாகந்தப்பிற்
குணமாகச் செய்பெடுக்க வருகாதப்பா
தறிப்பாகப் போயிவிடும் தன்மைசொன்னேன்
தாக்கறிந்து தங்கமில்லை தறிக்கமாட்டாய்
நெறிப்பாக உன்மனதைத் தேற்றிக்கொள்ளு
நிலையான வாதம்வரும் யோகம்பாரு
உறிப்பானை தயிரெடுத்தாப் போலேயாகும்
ஓதினேன் யாகோபு உண்மைதானே. (40)

உண்மையுள்ள கல்லுப்புச் சுண்ணந்தன்னை
ஓதரிது ஓதுகிறே னுண்மையாக
தண்மைபடச் செய்துகொண்டா லெல்லாஞ்சுண்ணந்
தாக்கினல் மலையேமமாகுப்பாரு
வண்மையுள்ள சரக்கெல்லாம் மாண்டுபோகும்
வடிவான வாதம்வரும் வகையுமாகும்
பண்மைபட யாகோபு பகர்ந்தவுப்பைப்
பதிவான நிலையறிந்தோர் பார்த்துய்வாரே. (41)

கல்லுப்புச்சுண்ணம் செயநீர்

பார்த்துமே கல்லுப்புப் படியுயொன்று
பதிவான நவச்சாரம் படியுபொன்று
ஏத்துமே கல்வத்தி லிதனைக்கொட்டி
இழுத்தரைப்பாய் நாயுருவிச் சாறுதன்னல்
காத்துமே வில்லைகட்டிக் கதிரில்வைத்துக்
கனிவாகப் புடம்போட்டுக் கல்வத்திட்டு
நாற்றிசையு மெய்த்திடமுன் சாறுவிட்டு
நன்ருக வேயரைக்க நலஞ்சொன்னேனே. (42)

நலமாக அரைத்துகதிர் காயவைத்து
நாடிமிகப் புடம்போடு சுண்ணமாகும்
பிலமாகச் சுண்ணத்துக் கிடைதான்சாரம்
பிசகாமற் சேர்த்தரைக்கச் சிவப்பதாகும்
வலமாக உமிநெருப்பில் வருத்துப்பின்பு
வடிவாகக் கவசம்வைத்துப் புடமுமிட்டுக்
கலமாகப் பனியில்வைக்கச் செயநீராகும்
காட்டினர் யாகோபு கருத்தாய்த்தானே (43)

கருத்தாகச் செய நீரில் வீரம்பூரம்
கனிவாகப் போட்டிடவே சிவப்புமாகும்
வருத்தாத யின்னீரு சகலமெல்லாம்
வடிவாகக் கட்டியது வடிவுமாகும்
உருத்தாக உப்பைவிட்டோர்க் குறுதியில்லை
உலகத்தில் வாதமில்லை யுற்றுப்பாரு
பெருத்ததொரு உப்பினுட சுண்ணம்போலப்
பெருமைகண்டு யாகோபு பேசினேனே. (44)

கெந்தகச் செம்பு.

பேசினேன் கெந்தகத்தின் செம்புகேளு
பெருமைதரும் நெல்லிக்காய்க் கெந்திதானும்
வீசியே பலப்பந்து நிறுத்துக்கல்வம்
விருதுபட விட்டுமே வீரங்காலாய்
வாசியே செய நீரா லரைமூச்சாமம்
வடிவாகக் குண்டுமணி போலேபண்ணி
பாசியே நிழலுலர்த்தி வைக்கவேதான்
பதிவாக யாகோபு பலன்சொன்னேனே. (45)

துருசுக்கெந்தி செம்பு

பலனுகக் கறைகண்டன் பலமும்பத்து
பாய்ச்சியரை பழச்சாறு தன்னுலாட்டிப்
பிலனுக உம்நெருப்பில் வருத்துப்போட்டு
பிசகாம லோட்டிலிட்டுப் புடமுமிட்டு
அலனுக உருக்கிடவே ரவியுமாகும்
அயமதனிற் பாதியிட்டுக் குகையில்வைத்துக்
கலனுகத் தண்ணீரபோ லுருக்கியிட்டுக்
காதலுடன் யாகோபு காட்டினரே. (46)

காட்டிடவே மூன்னுண்டை கிராசம்போடு
கதிபெருக யிடைக்கிடைதான் கண்டுகொள்ளு
மூட்டிடவே சத்தாதும் எடுத்துப்பாரு
முடிவான வெங்காரய் நாலிலொன்று
தேட்டிடவே கொடுத்துருக்கக் கசடுநீக்கும்
திடமாக யெடுத்துமே கல்வத்திட்டு
மாட்டிடவே பத்தலது பாதிசேரு
மகிழ்வாக யாகோபு பயின்றவாறே. (47)

வாறேது முன்னீரா லரைத்துக்கொண்டு
வகையான வில்லைதட்டிக் கதிரில்வைத்து
காறமாய்ப்புடம்போடச் சிவக்கும்நல்லாய்க்
கனிவாகக் காரமதைக் கொஞ்சமிட்டு
பாறிலே உருக்கிடவே அலரிப்பூப்போற்
பதிவான அயச்செம்பாம் பாரிலோர்க்குக்
கூறிதுதான் வேதைரெப்ப வோடும்பாரு
கொட்டினூர் யாகோபு குணமாய்த்தானே. (48)

குணமாக அயச்செம்பை யுருக்கும்போது
கொட்டிடுநீ நாலிலொன்று தங்கத்தாயை
மணமாகத் தங்கமிடை நாகம்போட்டு
மதியாக வுருக்கையிலே சொல்லக்கேளு
உணவாக முன்னுண்டை கெந்திதன்னை
உறுதிபெற யிடைக்கிடைதான் தாக்கச்சத்தாம்
பணமாகக் கல்வமிட்டே உடைக்கச்சொன்னூர்
பத்தியுள்ள யாகோபு பயின்றவாறே. (49)

பயின்றிட்ட பத்தலதைப் பாதிசேர்த்துப்
பதிவாக முன்னீரிற் பதியஆட்டி
நயின்றிட்ட வில்லைபண்ணிக் காயவைத்து
நலமாகப் புடம்போடச் செந்தூரிக்கும்
உயின்றிட்ட செந்தூர மகிமைசொல்ல
உறுதியுரை ஆண்டவரும் மயங்கிநிற்பார்
கயின்றிட்டு யான்கண்டேன் யாகோபென்பேர்
காட்டினேன் யிதுபெருமை கணக்குப்பாரே. (50)

கணக்காச் செம்புகால் தானுருக்கிக்
காட்டிடவே ஒன்றுயிடை கனகமாகும்
பிணக்காகச் சொல்லவில்லை யிந்தநூலிற்
பெருமைமெத்தப் புத்தியுள்ளோரறிந்து கொள்வார்
ஷணப்போது நில்லாது சரீரந்தானும்
தான்சித்தி பெறவென்றால் அயத்தைப்பாரு
குணக்கில்லா யாகோபு சொன்ன நீதி
கொட்டினேன் வாதமதைக் கொள்ளைதானே. (51)

கொள்ளையென்ற யிரும்பான செந்தூரத்தைக்
கொண்டுமொரு மண்டலத்திற் கொடிதாய்நோய்கள்
பிள்ளைசிறு பாலரைப்போ லிருக்குமேனி
பெரியோர்க ளுரைப்பார்கள் புத்தியோடே
வெள்ளம்வரு முன்னேதான் அணைகள்போட்டால்
விருதாவாய்ச் சாக்காடு யில்லையில்லை
உள்ளபடி பார்த்துணர்யா கோபுசொன்ன
உறுதியிது ரசவாதி கண்டுதேறே. (52)

செம்பு சத்து.

கண்டுயெடு சூரியனைக் குகையிலிட்டுக்
கனிவாக யிவ்விடைநா ரும்பூதாக்கு
உண்டுவிடுஞ் சத்தாகுங் காரங்கூட்டி
உருக்கிநல்லாய்க் கனமாகக் கல்வத்திட்டு
பண்டுபடு கொடியோனைப் பாதிசேர்த்துப்
பருத்திச்சா ரதனாலே அரைத்துவில்லை
கொண்டுகதிர் காயவைக்கச் சொன்னேன்பாரு
குரம்பையுட புடம்போடக் குருவுமாமே. (53)

குருவாக அதையெடுத்து வைத்துக்கொண்டு
குணமுள்ள கறைகண்டர் பலமும்பத்து
திருவாக ஆறுதரம் சாற்றாலாட்டித்
திறமாகப் பெரியபுடம் போட்டெடுத்து
உருவாகக் குகையில்வைத்து வுருக்கச்செம்பாம்
உத்துயெடு பலமிரண்டு வைத்துருக்கக்
கருவாக முன்குருவை யிடையே யீயக்
கண்டுசொன்னார் யாகோபு கருணைதானே. (54)

கருணைவைத்துச் செம்பதுவுங் கட்டியாகும்
கர்த்தாவைத் துதிசெய்து யெடுத்துமெள்ளத்
தருணமதில் யேழதுவில் மூன்று சேரு
தக்கதொரு யேமமே பாதிசேரு
அருணைநகர் போலதுவே யேமமாகும்
அதையடித்துப் புடம்போட மிறங்கும்பாரு
திருவினருள்ள தனை யெடுக்கச்சொன்னார்
திறமான யாகோபு திண்ணந்தானே. (55)

திண்ணமுடனிச்செம்பைக் கண்டுநீயும்
சீக்கிரமா யெடுத்தாக்காற் செல்வமாகும்
உண்ணுவுடு ஞானமுடன் யோகம்பாரு
உத்துமே நபிமாரை வணங்கநன்றும்
எண்ணமுடன் சொல்லாதே யிறசூலாகி
இல்லல்லா வென்று நீ யின்பமுற்றுப்
பெண்ணுறவு தன்னைவிட்டுப் பிரிந்துநீயும்
பெற்றிடுவாய் சுழிமுனையிற் பிரியம்வைத்தே. (56)

பிரியமுடன் பெரியோராய் நடக்கவென்றூற்
பேசாமல் அயச்செம்பைப் பேணிப்பாரு
குறியாகப் பொன்செய்ய வேணுமென்றூற்
குணமாகக் கெந்தியைத்தான் குறிப்பாய்ப்பார்த்து
வெறியாகத் திரியாதே யிந்நூல்தன்னை
விருப்பமா யடிதலையும் உற்றுப்பாரு
சிறியவனு யிருந்தாலும் புத்தியாலே
சீர்தூக்கிப் பாரென்றூர் திறமாய்த்தானே. (57)

சாரக் கட்டு.

பானென்ற தோதுவும் பலமும்நாலு
பாகமாய்ச் சீவியதை வைத்துக்கேளு
கானென்ற வளையமது பலமும்யெட்டு
கட்டியை நீ பொடித்துத்தேர் கீழ்மேலிட்டு
வானென்ற வடமதுவும் பலமும்நாலு
வகையாகப் பொடித்துத்தேர் கீழ்மேலிட்டு
தானென்ற அஞ்சுரு வாணிதன்னைத்
தாட்டிகமாய்ப் பலம்நாலு தன்மைதானே. (58)

தன்மையாய்ப் பொடித்துமே கீழ்மேலிட்டுத்
தக்கபொடி கிடத்துக்குள் நடுவில்வைத்து
உண்மையா யதன்பேரில் மணலையிட்டு
உறுதியா யமுக்கியே அடுப்பில்வைத்துப்
பெண்மையா யிருசாம மெரித்துப்பாரு
பெருமைபெற வுருக்கியே கட்டிநிற்கும்
வண்மையா யெடுத்துமே வைத்துக்கொள்ளு
வகையாக யாகோபு வழுத்தினூரே. (59)

வழுத்தவே சோரமது கரண்டியிட்டு
வகையாக வுருக்கியே யிலுப்பைநெய்யில்
அழுத்தமாய்ப் பதினேழு தரமேசாய்த்து
அதையெடுத்துக் கரண்டியிட்டு உருக்கிக்கொண்டு
முழுத்தமாய் முன்கட்டுத் தேரைப்போட்டு
முடிவாகக் கட்டியது மணியுமாகும்
இழுத்தபடி வாதிக்கும் வாதங்கா ணும்
இனம்பழுக்கும் யாகோபு எழுதினரே. (60)

எழுதியதோர் நாகமணி யுருகும்போது
ஏத்தமுள்ள யேமமதை யிடையேதாக்கு
பழுதில்லா திவ்விரண்டும் சேர்த்துத்தா னும்
பாரமா யுருகிநிற்கும் வேளை தன்னிற்
குழுகுழுவே நாரும்பூ யிடையேதாக்கு
கொக்கரித்து வாங்கியது கரிபோற்றாளாம்
வழுதியே யாகோபு சொன்னரித்தை
வையகத்தி லவர்பேரு விளங்கத்தானே (61)

விளங்கவே தானிந்தக் கரிக்குத்தா னும்
வெற்றிபெருங் கொடியோனைப் பாதிசேர்த்து
உளங்குளிரப் பொற்றலையின் சாற்றுலாட்டி
உருவில்லை காயவைத்துப் புடமூன்றிட்டால்
பழமான ததுபோலே சிவந்துநிற்கும்
பாகமா யெடுத்து நீ வைத்துக்கொண்டு
தளம்பெறவே யாகோபு சொன்னநேர்மை
தக்கதோர் புதுமையதாந் தன்மைபாரே. (62)

தன்மைபார் செம்புருக்கில் நூற்றுக்கொன்று
தான்கொடுக்க மாற்றதுவும் பத்துமாகும்
உண்மைபார் சாயமது நிறமதாகும்
உறுதியுள்ள நபிமார்க ளாடுமாட்டம்
எண்மைபார் உலகத்திற் சொல்லவேண்டாம்
இதுகண்டால் வெகுபேர்தான் செய்வாரென்று
வண்மையாய் சரக்கதுவும் பாஷையாக
வழுத்தினேன் யாகோபு வளஞ்சொன்னேனே (63)

வளமைபார் தங்கத்தில் நாகஞ்சேர்ந்தால்
வையகத்தில் மண்ணோடு யெல்லாந்தங்கம்
கிழமைபார் செம்புமுதல் வேதையாகும்
கெட்டியுள்ள நவலோக மெல்லாந்தங்கம்
பழமைபார் வாதமது எளிதிலாகும்
பழங்கதைகள் சொன்னாலே பதிவுமில்லை
கழகசரி யாகோபு சோதித்தேதான்
கருத்துவைத்து முந்நூறிற் கருதினாரே. (64)

கருதியே மக்கத்தில் நபிமாரெல்லாம்
கண்டுரச வாதமதைக் கருத்திற்பூண்டு
வருதியே யெத்தேச காலஞ்செய்து
வகையான சீவனத்திற் கிடமேபண்ணி
கருதியே வேதங்கள் மிகவுமோதி
சூட்சமுள்ள ஆண்டவனைத் தோத்தரித்துப்
பருதியே ரொட்டியைத்தா னுண்டுதேறி
பத்தியுள்ள யாகோபு பயின்றவாறே. (65)

துருசுச்சுண்ணம்.

பயின்றிடவே துருசினுட நீறுகேளு
பதிவான பலமொன்று நிறுத்துக்கொண்டு
கயின்றிடவே சுக்கானை நீத்தி நீயும்
கருதிபெறவே துணியதனிற் பூசிநன்றாய்த்
தயின்றிடவே நீலன்மேற் கவசங்கட்டித்
தடையறவே ரவியில்வைத்துத் தன்மைகேளு
குயின்றிடவே அப்புதான் சேருநாலு
கொண்டுவா வென்றுசொன்னார் குணமாய்த்தானே

கொண்டுவந்து சட்டியிட்டு உருக்கிக்கொண்டு
குணமாக முன்துருசு அதிலேபோட்டுப்
பண்டுபட அமுக்கியிடு சாமமொன்று
பதிவாக அப்புதா னிழுத்துக்கொள்ளும்
கண்டுபடக் களிம்புதான் வங்கமாகும்
கனிவாக லவணமது வெளுத்துநீறும்
முண்டுபட அதைப்பிரிக்க வெள்ளையாகும்
முத்திதரும் யாகோபு மொழிந்தவாறே. (67)

முத்திதரக் கிளிஞ்சிநீர் பலமுமொன்று
முக்கியமாய்ச் சிகரமது நாலிலொன்று
பத்திதற னரையதிவு மஞ்சளாகும்
பதியவெடு முன்துருசு மேலேகட்டு
வெத்திபெறக் கவுதாரிப் புடமுமிட்டால்
விருக்கிட்ட துருசதுவும் நீறிப்போகும்
சுத்தமத்து நீறிடுங்காண் துருசுச்சுண்ணம்
கோடுதரும் யாகோபு கூறினரே. (68)

கொடுமையுள்ள துருசு நீர் விராலிக்கிட்டு
கூட்டியரை நீராகும் அன்னீர் தன்னில்
அடுமையுள்ள யிரதமது பலமுமிட்டு
அயக்கரண்டி யிட்டுமே கொதிக்கவைத்துப்
படுமையது ரசமிறுகி மணியுமாகும்
பக்குவமா யெடுத்துமே பாகங்கேளு
தடுமாறு தெலுமிச்சம் பழத்துள்வைத்துத்
தாட்டிகமாய்ப் புடம்போட யிறுக்கும்பாரே. (69)

இறுக்கியெடு யிரதமதைக் கரியில்வைத்து
இதமாக வுருக்கிடவே யுருகிநிற்கும்
பெருக்கமுடன் வாதமது யேவல்கேட்கும்
பேசாத உபரசங்கள் சத்துவூட்டும்
பருக்கவெடு துவாரமிட்டு யிடையிற்கட்டு
பதிவான விந்திருகும் மணியுமாகும்
உருக்கமுள்ள காயசித்தி யுடனேயாகும்
உற்றுணர்ந்து பார்த்தாக்கா லுறுதியாமே. (70)

உறுதியாஞ் சூதமது கட்டினுக்கால்
உற்றரச வாதமது ஒழுங்கதாகும்
அறுதியாய் வெள்ளீயம் வெள்ளியாகும்
அடைவான பொன்னெல்லா மதிகமுண்டு
பருதிமதி பார்த்தவிடம் யேமமாகும்
பதிவான வசியமாம் பாரிலோர்க்குச்
சுருதிபட யாகோபு சொன்னநேர்மை
சூஸ்திரத்தை யாராய்ந்து தோய்ந்துபாரே. (71)

தோய்ந்துபார் துருசினுட நீறினலே
சுத்தமாம் மூகம்மதுவின் மார்க்கத்தாரும்
ஆய்ந்துமே மக்காவின் தேசந்தன்னில்
அவரவர்கள் வீதிதனில் வாதஞ்செய்து
பாய்ந்துமே நபிமார்க ளென்றுசொல்லிப்
பத்தியாய் நால்வேத முடிந்ததேசம்
காய்ந்துமே அத்தேசஞ் சென்றுபுக்கிக்
காட்சியெல்லாங் கண்டறிந்த கணக்குமாமே (72)

கணக்காக நால்வேதங் கண்டோர்பாதம்
கருத்திலுள்ள வாதமெல்லா மூடனேயாகும்
பிணக்காகச் சொன்னவர்க்கு ஒன்றுமில்லை
பிரட்டுத்தான் சொன்னர்க்கு நரகமாகும்
தணக்காக மூந்நூற்றைத் தோய்ந்துபாரு
தக்கநபி மார்களையே கண்டுபூசி
உனக்காக விண்டுசொன்னேன் யாகோபென்பேர்
உறுதிமெத்த யென்வசனம் பொய்போகாதே. (73)

போகாதே யென்பேரு ராமதேவர்
புக்கினேன் மக்காவின் தேசந்தன்னிற்
சாகாதே நாலுயுக மிருந்துசாரம்
தனைத்தொட்டு வேதைகள்தான் செய்தேனப்பா
ஆகாதே அவிடத்தில் நபிகளெல்லாம்
அனைவோருஞ் சாரத்தைத் தள்ளிப்போட்டு
ஏகாதே சூதமது குளிகைகட்டி
யெனக்குத்தான் சொன்னர்கள் யெய்தினேனே (74)

எய்தியே மனந்தனையே நிறுத்திஞானம்
இருந்துரைத்தேன் மக்காவின் தேசந்தன்னில்
உய்துமே வெகுநாளா யங்கிருந்தேன்
ஒருவருக்குந் தெரியாம லறிந்துகொண்டேன்
பய்தியே சிறியோரும் பெரியோர்தானும்
பக்குமா யெல்லோர்க்கும் ஞானமூண்டு
நய்தியே பெண்ணினுட வாடையாகா
நலமாக யிருப்பார்கள் பொய்சொல்லாரே. (75)

பொய்சொல்லா ரவர்களுட தேகந்தானும்
பூரணமாய் ரத்தமது மூத்திநிற்கும்
வைதிடுவார் உண்மையுள்ளார் வலுவுமுள்ளார்
வலுவாகத் தன்னுயிரை யெளிதிலேதான்
நைதிடவே நினைத்திடுவார் பிறவியில்லார்
நாட்டிலுள்ள நபிமார்கள் பிழைக்கும்நேர்மை
மெய்சொல்வார் புத்தியது மிகவுமுண்டு
மேதினியி லத்தேசம் வேதமாமே. (76)

வேதமா மவர்களுக்குச் சிரசில் தொப்பி
வேதாந்த மார்க்கத்தார் வெள்ளிதன்னில்
பாதமாந் தொழுதிடுவோர் பத்திமெத்த
பகலுறக்க மில்லாத பிரிவுமெத்த
சேதமிலாத் தன்னுடைய மனதுதானும்
சித்திபெற்று வலுவாகப் பேசுவார்கள்
நீதமாய் மனதுதா னிருக்கும்பாரு
நித்தியரா மத்தேச வழக்கம்பாரே. (77)

வழக்கமா மக்காவின் தேசந்தன்னில்
வாஞ்சையாய் தமிழனவன் போனுற்கேளு
பழக்கமாய் தன்னுடைய மார்க்கந்தன்னிற்
பதிவாகச் சேர்த்திடுவார் புத்திசொல்வார்
புழக்கமா யிசுலாத்துப் பண்ணுவார்கள்
புகழ்பெறவே இருங்களென்று சொல்லுவார்கள்
சழக்கில்லா நால்வேதம் மெய்யதாகும்
தரிகூடா மெய்யதுவைச் சொல்லக்கேளே. (78)

சொல்லவே நால்வேதம் லெப்பைமார்கள்
சொற்பெரிய உலகத்தில் கர்மிதன்னை
மெல்லவே ஆண்டவனைக் காட்டுமென்பார்
மேதினியிற் பணம்பொன்னுக் காசைவைத்து
தல்லவே சொல்லியிட்டுப் பணம்பிடுங்கி
நலமாக உன்னையவ ரேய்ப்பாரப்பா
உல்லவே நால்வேதக் காரனுக்கு
உண்மையுள்ள ஆண்டவனும் மெய்யுமாமே (79)

ஆண்டவனும் ஆரென்றூற் சொல்லக்கேளு
அருமைபடப் பெற்றவனும் ஆண்டமார்கள்
பாண்டவர்க ளானதொரு ஆண்டமார்கள்
பதிவான நால்வேத ஆண்டமார்கள்
தூண்டநின்ற விளக்கதுவும் ஆண்டமார்கள்
தொல்லுலகில் ரசவாதி ஆண்டமார்கள்
மூண்டவனும் பிறந்தோர்கள் ஆண்டமார்கள்
முத்திபெற யாகோபு மொழிந்தவாறே. (80)

அயமணி.

மொழிந்தஅயந் தானெடுத்து ராவிநீயும்
முக்கியமாய்ப் பலமிரண்டு தாசிரெண்டு
அழுந்தியெடு இரண்டுடனே வாழ்மடந்தை
அதுமூன்றுஞ் சேர்த்துமே கல்வத்திட்டு
வழிந்துஅரை கன்னிச்சார் தன்னுலாட்டி
வாழ்குகையி லிட்டுநீ யுருக்கிப்பாரு
பழுந்துமணி போலிருக்கும் பார்த்துக்கொள்ளு
பத்தியெடு உத்தமமாம் பரிவதாமே. (81)

பரிவாக உருகிநின்ற மணிக்குப்பாதி
பக்குவமாய் வண்டிலதைச் சேர்த்தரைத்துப்
பிரிவாக உருக்கிநல்லா யெடுத்துக்கொண்டு
பேசரிய கல்வமிட்டுப் பின்புதானும்
வரிவித்து விட்டாட்டிக் கொடியோன்பாதி
வைத்தரைத்து வில்லைதட்டிக் கதிரில்வைத்து
விரிவாகப் புடமதனைப் போட்டுப்பாரு
வித்தகருஞ் சிவப்பாகும் விளம்பினேனே. (82)

விளம்பினேம் மதியேழில் மூன்றுதாக்கு
விதமாக உருக்கியபின் யேமம்மூன்று
தளம்பியே சேர்த்துருக்கிப் பார்க்கும்போது
தாட்டிகமாய் வயததுவும் யெட்டுமாகும்
குளம்பியே யிதைவித்துச் செலவுசெய்து
கூசாமல் உண்டபின்பு ஞானப்பாரு
வளம்பியே சுழிமுனையில் மனதைப்பூட்டு
வடிவாக யாகோபு வழுத்தினேனே. (83)

வடிவான வாதங்கள் வந்தபோது
வகையாக மவுனத்தை மனதிலுன்னி
முடிவான தனைநினைத்து இருத்திக்கும்பி
முத்திக்கு வித்தாகும் முதன்மைபூண்டு
படிவாக வொருவருக்குச் சொன்னல் நீயும்
பத்திமுத்தி யில்லாம லழிந்துபோவாய்
குடிவான இவ்வசனம் நினைவிற்பூண்டு
குற்றமற்ற கண்டிதத்தைக் குணமாய்ப்பாரே. (84)

அயச்செம்பு.

குணமாக அயசெம்பு சொல்லக்கேளு
குற்றமற்ற கருப்பியைத்தான் ராவிக்கொண்டு
தனமாக யிதுக்குமெட்டி நீலநாத்தம்
சாதகமா யிதுக்குநிகர் சூதந்தூக்கு
பணமாக எலுமிச்சம் பழத்தாலாட்டிப்
பத்திசெய்து புடம்போட்டு உருக்கச்சத்தாம்
கனமாக வண்டிலிட்டுக் கொண்டுசேர்த்துக்
கணக்காக அரையாகுஞ் சொன்னவாறே. (85)

சொன்னதொரு முன்சாற்று லரைத்துருக்கச்
சொல்லவொண்ணு மணியாகுங் கல்வத்திட்டு
தன்னயமாய்க் கொடியோனைப் பாதிசேர்த்து
நல்லரைக்கப் பூத்துவிடும் வில்லைதட்டிக்
கன்னல்போல் புடமிட்டு யெடுத்துப்பாரு
கருணைபெறச் செந்தூரம் வண்டிலிட்டு
உன்னிதமா யுருக்கிடவே செம்புமாகும்
உறுதியிது யாகோபு உண்மைபாரே. (86)

உண்மையுள்ள அயச்செம்பு பலமும்நாலு
உத்துயெடு உருக்குமுகம் நாலிலொன்று
தன்மைபெருந் தங்கமது சோரம்ஒன்று
தாக்கியிடு அப்புவொன்று உருக்கியாட்டி
பண்மைபடக் கல்வமிட்டு உடைத்துப்பின்பு
பதிவான சூதமொன்று நரும்பூஒன்று
வெண்மைபடப் பொற்றலையின் நீராலாட்டி
வெற்றிபெறப் புடமிடவே சொன்னேன்பாரே. (87)

புடமிடவே கருப்பாகும் யெடுத்துக்கல்வம்
பூட்டியரை முன்னீரால் கொடியோன்பாதி
தடமிடவே சேர்த்தரைத்து வில்லைதட்டித்
தாக்கிடவே கதிரில்வைத்துப் புடமூன்றிட்டு
குடமாக யெடுத்திடச்செந் தூரமாகும்
கொள்ளைபோல் வாதமது குருக்குவேதை
படமாக நூற்றுக்கு ஒன்றுதாக்கப்
பத்திதரும் யேயமாம் பரிந்துபாரே. (88)

பரிந்துமே யிதைவித்துச் செலவுசெய்து
பார்த்திருநீ ஞானவழி மதியில்நில்லு
வரிந்துசுழி முனையதிலே யேறலாகும்
வண்மைபெறக் காயசித்தி யோகப்பாரு
தெரிந்துமே கைபாக வரிசையாகத்
திட்டமாய்ச் செய்திடவுந் தீர்க்கமாகும்
கரிந்துமே யாகோபு சொன்னரித்தைக்
காதலுடன் ரசவாதி கண்டுபாரே. (89)

கண்டுபார் பணவிடைதான் பாலிலுண்ணக்
காந்திகதிர் போலவுமே கனகமாகும்
பண்டுபார் மண்டலத்திற் சரீரந்தானும்
பதிவான செவ்வல்லி மேனியாகும்
உண்டுபார் நோயெல்லாங் கடலேபுக்கும்
உத்திபுத்தி ஞானவழி அடுத்துநிற்கும்
தொண்டுபடு மென்வசனம் பொய்போகாது
தொல்லுலகில் ரசவாதம் யேவலாமே. (90)

ஏவலாம் மூடினதோர் களங்கைத்தானும்
எடுத்துமே செந்தூரஞ் செய்தால்வேதை
ஆவலாங் களங்குசெய்து வெள்ளிதன்னில்
அடைவாகக் கொடுத்தூதச் சிதறிப்போகும்
காவலாம் வாதம்பொய் யென்றுசொன்ன
கசடருக்கு யிந்நூலைக் காட்டவேண்டாம்
பாகமா யாகோபு சொன்னரித்தைப்
பார்த்திடவே சகலமுந்தான் சித்தியாமே. (91)

சித்தியாம் உபரசத்திற் சுருக்குவேதை
 சிறப்பாகச் செய்யாமல் லோகந்தன்னிற்
புத்தியாய் சவுக்காரம் முடிப்பேனென்று
 புகலரிய பூநீற்றை யெடுத்துக்காய்ச்சி
சத்தியாய்ச் சிறுநீரை விட்டுக்காய்ச்சிச்
 சஞ்சலமாய்த் திரிவார்கள் ராச்சியத்தில்
எத்திசையுஞ் செப்பரிய மூடர்தானும்
 இன்பமில்லா தலைந்துமே மாளுவாரே. (92)

மாளாம லிருக்கவென்றுற் செம்பைமுந்தி
 வடிவாகப் பார்த்திட்டாற் பலனுமாகும்
கேளாமற் சுடவேண்டாம் நூலைப்பார்த்துக்
 கெட்டியா யடிதலையைக் கண்டுதேறு
பாழாகப் போகாமற் பலனுமாமே
 பார்த்துணர்ந்து நபிமாரைப் பத்திக்கொள்ளு
தேளான பசியடக்குஞ் சொன்னேனப்பா
 செகமெச்ச யாகோபு சொன்னவாறே. (93)

சொன்னதொரு கருக்கிடையுந் தேர்ந்துபார்த்துச்
 சொற்பெரிய கைபாக வரிசைகண்டு
நன்னயமாய்ச் சரக்கினுட நட்புகொண்டு
 நாடோறுஞ் சாஸ்திரங்கள் மிகவும்பார்த்து
இன்னிலத்திற் பதருமற் செய்துகொண்டால்
 இன்பரச வாதம்வரும் யெல்லாம்மெய்யே
பின்னும்பின் யாகோபு சொன்னரித்தைப்
 பிரபலமாய்க் கற்றுணர்ந்தால் பெரியோர்தானே. (94)

பெரியநபி யென்றசொல்தா னுருக்கென்றுல்
 பேசரிய ரசவாதம் வந்தபோராம்
வரியவனாய் மதியையக முற்றோர்க்கில்லை
 வழியில்லை துகையில்லை வரவுமில்லை
பெரியவாய்த் திரிந்தாலு மொன்றுமில்லை
 பிசகாமற் கைபாக வரிசைகாண்போர்
சரியவனு யாகோபு சொன்ன நீதி
 சஞ்சரித்த புத்தியவன் தன்மைதானே. (95)

தன்மையாய் மனந்தனிலே சரக்கையெண்ணி
சத்திசிவ மென்றறிந்து சேர்த்துப்பார்த்தால்
உண்மையாய் வாதம்வரும் யோகமாகும்
உறுதிவரும் பொன்னுகும் வசியஞானம்
வண்மைவரும் பலகலைநூல் தேர்ந்துபார்த்து
வளயாகத் தனக்குமே பதியாம்நன்மை
வெண்மையா யாகோபு சொன்னுரித்தை
வெகுபேர்க்கு வாதம்வரும் குணமுமாமே. (96)

திருசுக்கெந்தி களங்கு.

குணமாக இன்னமொரு களங்குகேளு
குற்றமறச் சொல்லுகிறேன் கூர்ந்துகேளு
பணமாகக் கறைகண்டன் பலமும்பத்து
பதிவாக நாறும்பூ பலமும்யேழு
மணமாக யெலுமிச்சம் பழச்சார்விட்டு
மாண்டபின்பு வில்லைகட்டிக் கதிரில்வைத்துக்
கணமான கல்லுப்புச் சுண்ணம்வேறே
கசகாமற் கூட்டென்று கட்டினேனே. (97)

கட்டியிடு புடம்பெரிதாய்ப் போட்டெடுக்கக்
கரியாகும் வண்டிலது காலுமிட்டு
தட்டியதை யுருக்கியே பார்க்கும்போது
தக்கசத்து வெள்ளையாய்த் தானேதோணும்
தொட்டிப்பாய் கல்வமிட்டுக் கொடியோன்பாதி
தொடர்ந்துபோட் டுக்கன்னி நீராலாட்டி
மட்டியபின் வில்லைதட்டிப் புடமூன்றிட்டு
மதியாகும் யாகோபு பரிவாய்த்தானே. (98)

அண்டச் சுண்ணம்.

பரிவாகச் செந்தூர மாகுந்தன்னைப்
பத்தியொடு புறம்பாக வைத்துக்கொண்டு
பிரிவாக அண்டோடு பலமும்பத்து
பிசகாமற் சட்டியிட்டு உவர்மண்ணிட்டு
நெரிவாகக் கிழிஞ்சி நீ ரிடையுமிட்டு
நேர்த்தியாய்ப் பாணிவிடு யெரிநேர்தானும்
குறியாக அண்டோடு யெண்ணெய்கக்கும்
கூறினுர் யாகோபு குணமாய்த்தானே. (99)

குணமாகச் சுத்த அண்ட ஒட்டைக்கல்வம்
குருக்கிலிட்டு வெண்கருவா லரைத்துலூத
தணமாக நீறிடுங்காண் வளையஞ்சேரு
தாக்கிட்டு முன்னீரால் தருகஆட்டி
கணமாக ஊதிடவே கடுமையாகும்
கலந்தெடுத்துக் கல்வமிட்டு முன்னீர் தன்னால்
உணவாக அரைத்திடயா கோபுசொன்னர்
உறுதிபிந்தப் படியரைக்க வொழுங்குமாமே. (100)

அரைத்துயெடு குழவிக்குக் கண்டர்மேலே
அதையப்பிக் காயவே கதிரில்வைத்து
பரைத்துமே அதுமேலே சீலெசெய்து
பதிவாகப் பெரியபுடம் போட்டுத்திரு
வரைத்துயெடு வண்டிலிட்டு உருக்கிப்பாரு
வண்மையாய் ரவியாகு மிந்தச்செம்பில்
தரைத்துமே மிச்செம்பில் முன்செந்தூரம்
தாக்கிட்டு இடைக்கியினந் தகமைபாரே. (101)

தகமையாய்ச் செந்தூரந் தன்னைத்தாக்கத்
தாஷ்டிகமாய்ச் செம்பதுவுங் கட்டிப்போகும்
உகமைபார் மதியேழு முன்சேர்த்தூது
உறுதிதங்க மொன்றுசேர்த் துருக்கிப்பாரு
வகமையாய் மாத்தெட்டுக் காணும்நன்றாய்
வகையாகு மிவ்வேதை மருவுமில்லை
பகமையில்லை யாகோபு செய்துபார்த்துப்
பகுத்தறிந்து உலமதிற் பாடினரே. (102)

பாடினதோர் செம்புதனிற் களிம்புபோகப்
பதிவான கெந்தியினூற் பத்திக்கொள்ளு
கூடினதோர் செம்புள்ளே மாளாவிட்டால்
குணமில்லை யூறல்வரும் கூர்ந்துதள்ளு
தேடினதோர் தேட்டெல்லாம் வீணய்ப்போகும்
திடமான புடமிறங்கச் சித்தியில்லை
ஊடினதோர் யாகோபு உறுதிசொன்னர்
உற்றுணர்ந்தோற் கெல்லாமு மெய்துந்தானே (103)

எய்துமே சத்துக்குத் துருசுவேணும்
இதமான நீத்தினமூந் துருசுவேணும்
எய்துமே களங்குக்குத் துருசுவேணும்
எழிலான செந்தூர மினத்துக்கெல்லாம்
எய்துமே துருசதுவுஞ் சேரவேணும்
யேழைமதி போகாமல் உற்றுப்பாரு
எய்துமே நபிமார்கள் செய்தயார்க்கம்
யீதுணர்ந்த பண்புமிது பாகமாமே. (104)

பாகமாய்ச் சாஸ்திரத்தைப் பாராமூடர்
பதிவான வாதமென்ற சமூத்திரத்தை
வேகமாய் நீந்தியே போகாரப்பா
விதமாக நீந்திற்கை யசரும்பாரு
பாகமது வாராது பலிதமில்லை
பார்த்திடுவான் பணம்போகும் தெரியாதோர்க்குத்
தாகமாய்ச் சொல்லிவிட்டேன் யாகோபென்பேர்
சாதகமா யுபதேசஞ் சாற்றினேமே (105)

சாற்றினதோர் சரக்குவகை யறியாமூடர்
சரியான பேச்சதனுற் பசப்புவார்கள்
போற்றினதோர் பணமதுவைச் சம்பாதிக்கப்
பொழுதுறக்க மில்லாமற் றிரிவார்பாரு
ஏற்றினதோர் தீபவொளி யறியமாட்டார்
இன்பத்துக் காகவேபொய் சொல்வாரப்பா
தேற்றினதோர் பாணிதனே யறியாமற்றான்
திடமாகச் செப்பிடுவார் சிறியோர்தானே. (106)

சிறியோர்க ளென்றமொழி யாருக்காச்சு
சித்திபெறச் சாஸ்திரங்கள் படிக்காதாலே
பெரியோர்க ளென்றபே ராருக்காச்சு
பேணியிந்தச் சாஸ்திரத்தைப் பார்த்ததாலே
அறிவோர்க ளென்றபே ராருக்காச்சு
அடங்கியே வுலகமதில் நடந்ததாலே
குறியோர்க ளென்றபே ராருக்காச்சு
குருவுக்குப் பிரியமுடன் பணிந்தபேர்க்கே. (107)

பணிந்துமே ஒருகளங்கஞ் சொல்லக்கேளு
பதிவான விதியாளி கண்டுகொள்வான்
அணிந்துமே ஆண்டவனுஞ் சொன்ன நீதி
அதையறிந்து பாகமாய்ச் செய்துகொண்டால்
துணிந்துமே யிந்நிலத்திற் பெரியோனென்று
தொல்லுலகிற் பேரும்பிர தாபமாகும்
பணிந்துமே கைபாக வரிசையாகப்
பாரதனிற் சொல்லிவிட்டார் பண்பாய்த்தானே (108)

பொன்னிமிளைச் செந்தூரம்.

சொல்லிவிட்ட பொன்னிமிளை பலந்தானென்று
சுருதியெலு மிச்சம்பழச் சாற்றாலாட்டி
வெல்லிட்ட இருசாமஞ் சென்றரைத்து
விருப்பமாய்த் தங்கமென்ற தகட்டிலப்பு
சொல்லிட்டுத் தங்கமது கருத்துப்போகும்
குணமான தனதயெடுத்துக் கல்வமிட்டு
மல்லிவிட்டுக் கொடியோனைச் சேர்த்துஆட்டி
மதித்துமே புடப்போடு வகையாய்த்தானே. (109)

வகையாகச் செந்தூர மாகும்பாரு
வடிவாக மதியெட்டு செம்பிரண்டு
துகையாக ஒன்றிட்டு உருக்கிப்பாரு
தூக்கிடுங்காண் தங்கத்துக் கதிகவர்ணம்
நகையாகச் சித்தர்வகை யெளிதிற்செய்வார்
நாதாக்க ளாடினதோ ராட்டைத்தானும்
தகையாகச் சொல்லிவிட்டே னிம்முந்நூறிற்
ருக்கினேன் யாகோபு தன்மைதானே. (110)

தண்மையாய் மக்காவின் தேசந்தன்னில்
தருகாவில் நபிமார்கள் மெத்தவுண்டு
உண்மையா யவரவர்க்கு வாதமுண்டு
உத்ததோர் பாஷாணம் மிகவுமுண்டு
வண்மையா யதையெடுப்பார் செய்துகொள்வார்
வகையறிவார் நவலோகம் பழுக்கச்செய்வார்
குண்மையா யிருந்தவிடந் தெரியாமற்றூன்
குருவாக யிருப்பாராங் கொள்கைதானே. (111)

தானென்ற காவேரித் தாவிலுள்ளோர்
தனியான மலையினுட பாஷாணத்தை
வானென்ற தறியாமற் பாங்கிவைக்கும்
வைப்பான பாஷாணந் தன்னைவாங்கி
ஊனென்ற துருசுடனே தானுருக்கு
உத்தமமாஞ் சத்துவகை தானுஞ்சேர்த்துக்
கானென்ற சத்தைத்தான் பிரிந்துசெம்பு
கருதியே யெடுத்துமே வேதைதானே. (112)

வேதைதான் பார்த்துமே கடையில்விற்று
விருப்பமாய் ஞானவழி யடுப்பாரப்பா
பாதையாம் மிகவிருப்பி மக்காதேசம்
பதிவாகச் செய்கின்ற தங்கந்தானும்
நீதையாம் மாத்ததுவும் பனிரண்டாகும்
நேராகுங் காவேரி நாட்டில்வாதம்
சாதையாய்ப் பொன்னதுவு மெட்டேகாலம்
சாஸ்திரத்தைப் பார்த்துமே செய்குவாயே. (113)

பார்த்துமே வைப்பான துருசினாலே
பதிவாக நீத்தியே சூதங்கட்டி
நாத்துமே வளர்ந்தாற்போல் செய்குவார்பார்
நலமாக மக்காவின் தேசந்தன்னிற்
காத்துமே மலைதனிலே விளையும்நல்ல
கனமான துருசதுவை நீற்றிச்செய்வார்
கோத்துமே அண்டரண்டந் தங்கவேண்டிக்
குற்றமற யிருப்பார்கள் கொள்ளைதானே. (114)

கொள்ளையாம் மண்ணோடு மரங்களெல்லாம்
குணமாகத் தொட்டவுடன் பழுத்துப்போகும்
பிள்ளையாங் காவேரி தன்னில்வாதம்
பிரியமாய் வெள்ளிரவி தானுருக்கித்
துள்ளவே யதிற்கொடுத்துச் செட்டிகையில்
துணிகரமாய் விற்பனைகள் செய்வார்பாரு
வெள்ளையா யாகோபு சொன்ன நீதி
வேதாந்தி கண்டுமிக விரும்புவாரே. (115)

விருப்புவா ருலகத்திற் கருமிதானும்
விருப்பமாய்ச் செய்வார்கள் விட்டுப்போட்டு
திரும்புவார் ஏறுமுவார் பிரட்டுச்செய்வார்
திட்டமாய் வியாபாரம் மிகவுஞ் செய்வார்
அரும்புவார் வட்டிக்குக் கொடுத்துநாளை
அடைவாகப் போக்கியே திரிவாரப்பா
நரும்பூவுங் கண்டரவி சேர்த்துச்சத்து
நலமாகச் செம்பெடுக்க மாட்டார்தானே. (116)

தங்கச் செம்பு.

மாட்டவே யின்னமொரு களங்குகேளு
மார்க்கத்தைக் கண்டறிந்த வாதிக்குத்தான்
மூட்டவே கண்டருடன் சத்திசேர்த்து
மூட்டியரை பாணியினுற் பின்புமூன்று
ஆட்டவே சாமமது வில்லைதட்டி
ஆத்திரம தாகவே நீ புடத்தைப்போடு
நாட்டவே கரியாகு மென்றுசொன்னர்
நலமாக யெடுத்தபின்பு நாட்டங்கேளே. (117)

நாட்டமென்ன கொடியோனைப் பாதிசேர்த்து
நலமாகத் தானரைக்கப் பழச்சாற்றுலே
வாட்டமென்ன வில்லைகட்டிக் கதிரில்வைத்து
வடிவாகப் புடம்போட்டு யெடுத்துப்பாரு
பாட்டமென்ன கரியதுவுஞ் சிவந்துபோகும்
பதிவாகச் சிவப்பதுவை யெடுத்துக்கொண்டு
கூட்டமென்ன யேமமதை யுருக்கிநேரே
குணமாகச் செந்தூரங் கொடுத்திடாயே. (118)

கொடுத்திடவே தங்கமது செப்புமாகும்
கூக்குரல் நீ போடாமற் கெந்திவீரம்
அடுத்திடவே மடந்தையுமே கூடச்சேர்த்து
அரைப்பங்கு பூசியே புடத்தைப்போட்டு
தடுத்திடவே நொறுங்குமது கரிபோலாகும்
தன்மையாய்க் கொடியோனைப் பாதிசேர்த்து
அடுத்திடவே பழச்சாற்றி லரைத்துவில்லை
அடைவாகச் செய்திடுவாய் ஆனந்தப்போக்கே. (119)

அனந்தமென்ன செந்தூர மாகும்பாரு
ஆதியாய் மதிதனிலே யெட்டுக்கொன்று
கனந்தமாய்க் கொடுத்துருக்கிப் பார்க்கும்போது
காரணமா யெட்டரைதான் காணும்பாரு
தனந்துமே பணவிடைதான் பாலிலுண்டு
சதாகோடி காலமெல்லா மிருப்பார்கண்டீர்
வனந்தனிலே சருகரித்துக் காலந்தள்ளு
வடிவான யாகோபு வகைசொன்னாரே. (120)

சொன்னயமா மிந்தமுந் நூறுதன்னிற்
சொல்லரிய வாதம்வருங் கண்டுதேறு
நன்னயமா மிகபரந்தா னிரண்டுமூன்று
நாதாந்த சாரமுடன் காயசித்தி
வின்னமில்லா மற்றுனே வந்துகூடும்
விருதாவாய்ச் சாஸ்திரத்தை யறியாமூடர்
இன்னிலத்தி லவன்பேச்சுக் கேட்டுச்சுட்டு
யிதமாக மாயையதி லழுந்துவாரே. (121)

கல்லுப்பு வெங்காரக்கட்டு.

அழுந்தாமல் வண்டிலது பலமும்பத்து
அடைவாகக் கட்டியா யெடுத்துக்கொண்டு
தழுந்தாமற் கடல்நுறையை வூதநீறும்
தாக்கியே அதின்பேரிற் பெரியதாய்க்கட்டி
வழுந்தவே உப்பதுவும் பலமும்பத்து
வகையாக உருக்கியே அதினினுள்ளே
கழுந்தவே அழுத்தியே பிடிக்கவென்று
கருணைவைத்து யாகோபு கருதினாரே. (122)

கருதினா ருப்பதுவுங் கசிவுமத்து
கரியில்நின்று ஆடுமது கனகமாக
உருதியாய்க் குகையிலிட்டு உருக்கும்போது
உணவாக நாலுக்கு ஒன்றுதங்கம்
அறுதியாய்த் தங்கமிடை நாகம்போட்டு
அன்பாகக் களங்காகும் நாற்றுக்கொன்று
பருதியாய் ரவிபழுக்கும் நேர்மையாகும்
பகுத்தறிந்து யாகோபு சொன்னார்தானே. (123)

சொன்னதோ ருப்பைமுந்திக் கட்டப்பாரு
        சூட்சமாய் வாதமது யேவல்செய்யும்
நன்னயமா யுப்பைப்போ லொன்றுமில்லை
        நாட்டிலே சொல்லாதே நலமதாகும்
இன்னிலத்திற் கல்லுப்பில் நிரம்பவேதை
        இனிதான சிவசொத்து யெய்தும்பாரு
கன்னல்போ லிருக்குமந்தக் கல்லுப்புத்தான்
        காட்டினர் யாகோபு கண்டார்தானே. (124)

கண்டார்கள் சாஸ்திரத்தின் முறைபாடெல்லாம்
        கனிவாகக் காணுதார் மூட்டாப்பேய்கள்
தொண்டாகப் படித்தவரைத் தொண்டுசெய்வார்
        சுருதிதனை ஆராய்ந்தோர் சொல்லமாட்டார்
கண்டாலும் பேசார்க ளின்னங்கேளு
        கனிவாக படியாதார் மிகவேசொல்வார்
பண்டுபழங் கதைசொல்வார் நம்பவேண்டாம்
        பார்தனிலே செய்தாக்கால் பலனுமாமே. (125)

பலனகச் சொல்லுகிறேன் சாஸ்திரத்தைப்
        பதிவாகப் படித்தாக்காற் பத்தியாகும்
பெலமான செம்பாகும் செம்புதன்னைப்
        பேத்திட்டுத் தங்கமதைச் சேர்த்துநீயும்
வலமாக நாரும்பூ போட்டுக்கொள்ளு
        வடிவாக யெழும்பிடவே வர்ணமெல்லாம்
கலனில்லாத் தங்கமாம் பெரியோர்சொன்னர்
        காதலா யாகோபு கருதினரே. (126)

வெடியுப்புத் திராவகம்.

கருதியே யின்னமோ ருப்புச்சுண்ணம்
        கனிவாக வேதையாங் கண்டுபாரு
வருதியே வடமதுவும் பலமும்பத்து
        வகையான வளையமது இருபத்தஞ்சு
பருதியே கல்லுரலி லிடித்துப்போடு
        பதிவான வாலையென்ற சட்டிமூடி
சுருதியே முன்னீரைத் தள்ளிப்போடு
        சுத்தமாங் கடைநீரைப் பிடித்துக்கொள்ளே. (127)

பிடித்துமே சேரிரண்டு அதிலேதானும்
பெலமான சூதமது பலமும்காலாம்
வடித்துமே அதிலிட்டு ரவியில்வைக்க
வாதாகக் கரைந்துமே புகைநீரோடே
குடித்துமே நீராகும் நீரைத்தானும்
குணமாக வைத்துமே குருக்குவேதை
அடித்துமே யாகோபுச் சொன்னேன்பாரு
துணையான இந்நூலைத் தோய்ந்துதேறே. (128)

தோய்ந்துபார் கருவேது வென்றாற்கேளு
தொல்லுலகிற் பாகமதைக் கண்டுகொள்ள
ஆய்ந்துபார் சரக்குஅறு பத்தினாலும்
அடைவாக வட்டிக்கு லைத்தாப்போலே
சாய்ந்துமே கட்டாகும் மெழுகுமாகும்
சரியான செந்தூர மிதிலேயாகும்
பாய்ந்துமே யாகோபு கண்ட நீதி
பகுத்தறிந்து பார்த்தவர்க்குப் பதஞ்சொன்னேனே.

பதமாம்பா ஷாணமுப் பத்திரண்டு
பலமாகச் சுத்திசெய்து புகைநீர்தன்னை
அதமாகச் சுருக்கிடவே யெல்லாங்கட்டும்
ஆதியாஞ் சூதமுதல் வெள்ளைதானும்
விதமாகக் கட்டியே வேதையாகும்
வித்தகமாய்த் தொட்டதெல்லாஞ் சித்தியாகும்
சதமாக யாகோபு சொன்ன நீதி
சத்தியமாய்ச் சொல்லுகிறேன் தாக்கிப்பாரே. (130)

தாக்கிப்பார் லிங்கமுதல் வெள்ளைதானுந்
தடையறவே குதிரைப்பல் சூதந்தானும்
வாக்கிப்பார் செம்பினுட தொட்டியோடு
வகையான கரியோட்டில் ஊதிநல்லாய்ப்
பாக்கியமாய்ச் சுருக்கிடவே கட்டிப்போகும்
பதிவான கரியில் நின்று ஆடிநிற்கும்
தாக்கியே நவலோகந் தன்னில்வேதை
தப்பாமல் வாதிசெய்யுந் தொழிலுமாமே. (131)

தொழிலாகத் திராவகத்தை வைத்துக்கொண்டு
 துணையாகச் சாக்கையெல்லாந் துடியாய்க்கட்டும்
செழிப்பாக வுலகத்தி லிருந்துபாரு
 சேதியெல்லாங் கேட்டுமே செவியில்வாங்கு
பழிப்பாக வொருவரையும் பழிக்கவேண்டாம்
 பழித்தாக்கா லுன்னையவன் கொல்வான்பாரு
துளிப்பாயும் வழியறிந்து நூலைச்சொன்னர்
 சூட்டினவர் பதினெட்டுச் சித்தர்தாமே. (132)

சித்தராய்ப் போகவென்றாற் புகைநீர்தன்னைச்
 சீர்பெறவே தான்வைத்துத் துணையாய்க்கொள்ளு
பத்தரா யிருக்கவென்றாற் குருவின்பாதம்
 பத்தியே யவர்பாதம் பத்திக்கொள்ளு
முத்தரா யிருக்கவென்றால் மூலம்பாரு
 முத்திபெறக் கேசரியை முயன்றுபாரு
வித்தகராய்ப் போகவென்றாற் சுயத்தைப்பாரு
 விருதாவைப் பாராதே முத்திபாரே. (133)

பாரேநீ கைபாகம் வந்துதென்றாற்
 பதிவான ரசவாதம் பாரிலோர்க்கு
ஏரேநீ கட்டியதை யுழுதால்நன்மை
 ஏரில்லா னருத்தடித்த கதைபோற்சொல்வார்
வாரேநீ குளிகைக்குப் போட்டிருக்கில்
 வகையாக நடத்தைசெய்தால் வகையாம்பாரு
தாரேநீ யாகோபு சொன்ன நீதி
 சஞ்சலமாய்க் கேட்டாக்கால் சரிவாராதே. (134)

சரிவாரா தொருபொருளை நம்பவேண்டாம்
 சரியான வாதமது நம்பித்தேறு
பரிவாரப் படிப்பைத்தான் நம்பினுக்கால்
 பதிநாலு லோகமெல்லாம் ஆளுவாய்நீ
கரிபோலே யிருந்திடுவீர் தேசந்தன்னிற்
 கருத்ததுவைக் கைப்பிடித்து வாழலாகும்
பிரியமா யிருந்தாலே புத்திவேணும்
 பிரட்டில்லை யாகோபு பேசினேனே. (135)

பேசியே சிறிதுபேர் வாதஞ்செய்வார்
பிரட்டியே பணங்களைத்தான் வாங்கிக்கொண்டு
ஆசியே ஓடியே போவாரப்பா
அசடர்கள்தான் செய்திடுவா ரிந்தவித்தை
பாசிதனிற் பழங்கல்லு யெறிந்தாற்போலப்
பதிவாக விலகியே வந்துகூடும்
ஏசியே திரிவார்கள் பாவியார்கள்
இதமான யாகோபு யிதஞ்சொன்னேனே. (136)

இதமான புத்திமன மாங்காரந்தான்
இன்பமா யிவ்விடத்திற் புத்திகெட்டு
அதமான படியில்லா மனிதர்சொல்லை
அழிம்பாகக் கேட்டுமே அநேகஞ்சுட்டு
விதமான கதைகார ணங்கள்பேசி
வெகுகோடி பணமெல்லாஞ் சுட்டுக்கெட்டார்
சூதமாகச் சொல்லிடுவார் நம்பவேண்டாம்
குறியான யாகோபு குறிசொன்னேனே. (137)

சவுக்காரச் சுண்ணம்.

சொன்னதொரு சவுக்காரச் சுண்ணங்கேளு
சொற்பெரிய குத்துக்கல் தன்னைவாங்கு
பன்னதொரு சேர்நாலு நிறுத்துக்கொண்டு
பக்குவமாய்க் கற்சட்டி தன்னிலிட்டு
நன்னயமாய்ப் பாணியது சேருயெட்டு
நலமாகச் சுக்கநீர் சேருநாலு
பின்னமில் லாமலேதான் கலக்கிமூன்று
பிறபலயாய் வடிகட்டிக் காய்ச்சிடாயே. (138)

காச்சிடவே அடியில்நின்று உறைத்து உப்பைக்
கணக்காக யிருந்திடுங்காண் அதைவழித்துப்
பாச்சிடவே குழிககல்வந் தன்னிலிட்டு
பக்குவமா யரைத்துவில்லை காயவைத்து
வாச்சிடவே புடம்போட்டு யெடுத்துப்பாரு
வகையாகத் தந்தப்போ லுப்புமாகும்
நீச்சிடவே யிந்தஉப்புக் காரமாச்சு
நிலையான உப்பினுட பெருமைசேளே. (139)

பெருமையா யுப்பதுவும் பலம்நிறுத்துப்
    பீங்கானுங் கல்வத்தில் மிகவேவைத்து
அருமையா யரைத்துமுன் துருசுக்கிட்டு
    அடைவாகக் காடையென்ற புடத்தில்நீறும்
கருமையாத் துருசுநீர் தன்னுற்கேளு
    கடமான உபரசங்க ளெல்லாம்நீறும்
வருமையா யித்துருசு தன்னுல்யார்க்கும்
    வகையான குளிகைகட்டி வாழ்ந்தார்தாமே. (140)

வாழ்ந்திடவே நீலனது நீறவேணும்
    வாகான காயசித்தி வாதசித்தி
தாழ்ந்திடவே போகாமற் சுண்ணந்தன்னைத்
    தாட்டிகமாய் வைத்துமே யிரதங்கூட்டி
வீழ்ந்திடவே உபரசங்கள் சத்தையூட்டி
    விருப்பமாய் முனிசித்தர் வாதம்பார்த்தார்
ஆழ்ந்திடவே கெவுனத்தி லிருப்பாரப்பா
    அடைவான யாகோபு அறைந்திட்டாரே. (141)

அறைந்திட்ட சவுக்காரச் சுண்ணம்பொய்யோ
    அன்பான குளிகைபொய்யோ அருளால்நோக்கி
பறைந்திட்ட துருசுனுட சுண்ணம்பொய்யோ
    பாதையதில் நிரம்பவுண்டு பிரிவுமெத்த
உறைந்திட்ட செம்பதுவை யெடுத்தோர் பொய்யோ
    உண்மையாய் நடவாதார்க் கெல்லாம்பொய்யோ
குறைந்திட்ட வாதங்கள் பார்த்துநானும்
    கூறினேன் யாகோபு குணமாய்த்தானே. (142)

குணமாக நபிமார்கள் பெருமைதன்னைக்
    கூறினேன் மூந்நூறிற் குணமதாக
மணமாக அவரவர்கள் செய்யுமார்க்கம்
    வகைசொன்னேன் மயக்கமெல்லாந் தீரச்சொன்னேன்
தனமாக யெப்பொருளுந் தேர்ந்துபார்த்துத்
    தாட்டிகமாய் ஒருவேலை செய்துகொண்டால்
கனமாக யெல்லாமே சித்தியாகும்
    கருத்துணர்ந்து யாகோபு கருதினுரே. (143)

வங்கச் செந்தூரம்.

கருதினேன் கருநாகவித்தைதன்னைக்
காட்டுகிறேன் யிதுலெகுவு முன்னேபாரு
வருதினேன் காரீயம் பலமுப்பத்து
வகையாகக் குமரிச்சா ரதிலுருக்கி
உருதியா யிருபத்து ஒன்றுதானும்
உத்துமே சாய்த்தபின்பு சொல்லக்கேளு
தருதியா யாகோபு வங்கந்தன்னைத்
தாஷ்டிகமா யுலகதனிற் சொன்னவாறே. (144)

சொன்னதொரு வடமதுவும் பலமும்பத்து
சொற்பெரிய வளையமது ஐயைந்தாகும்
நன்னயமா யிரண்டுமொன்று யிடிக்கத்தூளாம்
நாடியே வாலையிட்டு அடுப்பிலேற்றி
கன்னல்போ லெரிக்கவே புகைநீர்வந்து
கணக்காக முன்னீரைக் கருதித்தள்ளி
இன்னிலத்திற் கடைநீரைப் பிடித்துக்கொள்ளு
இன்பமுற்று யாகோபு இதஞ்சொன்னரே. (145)

இகமாக மூன்வங்கந் தன்னிலிட்டு
இன்பமா யிழுத்தரைத்து வில்லைதட்டி
அதமாகக் கதிரில்வைத்துப் புடமும்போட்டு
அன்பாக யெடுத்திடவே சிவந்துநிற்கும்
குதமாக மாண்டுதடா வங்கந்தானும்
குத்தமறும் யெடுத்துநீ கூறக்கேளு
விதமாக யாகோபு சொன்ன நீதி
விருப்பமாய்க் கைபாக வரிசைபாரே. (146)

வரிசையாய்த் தாளகமும் பலமுப்பத்து
வைத்துயெரி சுண்ணத்தில் இருசாமந்தான்
புரிசையாய்ச் சிவந்துநிற்கும் யெடுத்துக்கொண்டு
போக்கோடே முன்வந்த செந்தூரத்தில்
பரிசையாய் நாலிலொன்று சேர்த்துக்கொண்டு
பதிவாகப் புகைநீரா லாட்டிக்கொண்டு
கரிசையாய் வில்லைகட்டி யாகோபுந்தான்
கனிந்துமே புடம்போடச் சொன்னவாறே. (147)

புடம்போட்டு யெடுத்திடவே செந்தூரிக்கும்
புகலரிய செந்தூரம் நூற்றுக்கொன்று
தடம்போட்டு ரவியுருக்கி யதிலேதாக்கு
தாட்டிகமாய் ரவிபழுத்த தன்மைகேளு
கடம்போடு கைவரிசை யாகச்செய்து
கருத்தாலே பாகமெல்லாங் கண்டுகொள்ளு
விடம்போலப் புத்திவர வேணும்பாரு
வேதாந்த யாகோபு விளம்பினாரே. (148)

விளம்பினார் குருமுனியும் மானிடர்க்கு
விருப்பமாய்ப் புத்திசொன்னார் வாதஞ்சொன்னார்
தளம்பினா ரிதையறிந்து பெரியோர்தானும்
தாட்டிகமாய்ச் செய்வார்கள் தடையோயில்லை
குளம்பியே எண்ணமுற்றுத் திரியவேண்டாம்
கூக்குறலாய்ச் செய்யாதே கோடிபாவம்
துளம்பியே சொல்வார்கள் புத்தியுள்ளோர்
துப்பறவா யறிந்தயா கோபுதானே. (149)

தானென்ற செந்தூரம் பணபவ்வீதம்
தாட்டிகமாய் மண்டலந்தா னுண்டுதேறு
வானென்ற நரைதிரைக ளற்றுப்போகும்
வலுவாகும் வங்கத்துக் குறுதிமெத்த
கானென்ற கைப்போடு புளிப்புத்தள்ளு
காரியமாய்ப் பார்த்துநீ கருதிவைக்க
ஏனென்ற யாகோபு சொன்னாரித்தை
இதமான புத்தியுள்ளோ ரறிந்தவாரே. (150)

காரீயச் செம்பு.

அறிந்திடவே காரீயச் செம்புகேளு
அடைவாகக் காரீயம் பலமும்நாலு
குறிந்திடவே ரவியதுவும் பலமும்நாலு
கூட்டியே உருக்கிமெள்ளக் குமரிப்பாலில்
பறிந்திடவே உருக்கிச்சாய் சுத்தியாகும்
பதிவாக யெடுத்துமே குகையிலிட்டு
வறிந்திடவே உருக்கென்று யாகோப்சொன்னார்
வண்மையிது நிசமாகும் வழுத்திடாயே. (151)

வழுத்திடவே தேவியது பலமும்பத்து
வகையான அரசனது பலமும்பத்து
தழுத்திடவே யிரண்டுஞ்செங் கீரைச்சாறு
தன்னைவிட்டு அரைத்துமே குன்றிபோலே
உழுத்திடவே காயவைத்து முன்னே தானும்
உகந்துநின்று வங்கத்திற் கிராசம்போடக்
கழுத்தியே வாங்கியது கரியுமாகும்
காட்டினார் யாகோபு கணக்காய்த்தானே. (152)

கணக்காக யெடுத்துமே கல்வத்திட்டு
கண்டுஅரை பாதிசேர் கொடியோன்றன்னை
பிணக்காக அரைத்துவில்லை கதிரில்வைத்து
பின்புதான் புடம்போடக் கக்குஞ்செம்பு
இணக்காக உருக்கிடவே ரவியுமாகும்
இன்பமாய் ரவியெடுத்து உருக்கிக்கொண்டு
வணக்காகத் தங்கமதை யிடையேசேரு
வளமைசொன்னார் யாகோபு பலமாய்த்தானே. (153)

பலனாக யிதைவைத்துப் பிழைத்துக்கொள்ளு
பக்குவமாய்ப் பின்னேதான் பண்டிதத்தைப்
புலனாகப் பார்த்துக்கோ அறிந்துநன்றாய்ப்
புகழாதி யுலகத்தி லிருந்துகொள்ளு
பெலனாக ஒருவருடன் பேசவேண்டாம்
பேசினாப் பிழைவருங்காண் மனமகற்றும்
வலனாகப் பாராதே மவுனம்பாரு
வழுத்தினார் யாகோபு வரிசைதானே. (154)

வரிசையா யுருக்கியே தகடடித்து
வண்மைபெறச் சத்திசிவ மதிலேபூசு
உரிசையாய்ப் புடம்நாலு போட்டுத்தீரு
உத்துமே செந்தூரம் முருக்கம்பூப்போற்
கரிசையா யிருந்துவிடும் மதியிலிட்டுக்
கருவாக ஒன்றிட்டு உருக்கிப்பாரு
பரிசையா யேமமது பத்துமாகும்
பார்த்தறிந்து க்ருத்தோடு பலன்சொன்னாரே. (155)

கருத்திலே மெய்யாக வாதந்தன்னைக்
கண்டுயெடு யெடுத்தபின்பு கருத்திற்கொள்ளு
உருத்தாக ஏழைபோ லிருந்துவாழு
உத்ததோ ருறவாகும் உறுதியாகும்
பெருத்தாக அலையாதே பின்புகேளு
பெரியோராய்ச் சமாதிதனிற் புக்கலாகும்
வருத்தாமற் றிரியலாம் வாழ்வுண்டாகும்
வையகத்தில் யாகோபு வகைசொன்னாரே. (156)

வகையான ரசவாதம் எளிதோ அல்ல
வந்திட்டாற் குபேரனவன் வாராவிட்டால்
மிகையான மிடியனென்று சொல்லுவார்கள் -
மென்மேலும் பழிப்பார்கள் தோசியப்பா
பகையாகப் பேசிடுவார் உலகமாடு
பார்க்கறியா நிர்மூடர் பழிகாரர்தான்
திகையாகத் திகைப்பார்கள் உலகவாதி
தேத்தினர் யாகோபு திறமைதானே. (157)

திறமான பொருளறிய வேணுமென்றால்
திட்டமா யிந்நூலோ டெந்நூலெல்லாம்
நிறமாகும் அடிதலையும் நுனியுமட்டும்
நீ-யாராய்ந்து யேறியே வழியைப்பாரு
குறமான குணமெல்லாம் கோடிவித்தை
குபேரனைப்போ லாவானுங் குறித்தசிந்தை
துறவாகு மிந்தமூந்நூ றதனைப்பாரு
துப்பறவா யாகோபு துலங்கச்சொன்னர். (158)

வெள்ளிக்களங்கு.

சொன்னதோர் களங்குவகை யின்னங்கேளு
சுத்தமுள்ள வெள்ளியது பத்துதன்னை
நன்னயமா யுருக்கிரண்டு செம்புசேர்த்து
நலமாக உருக்கியபின் நாட்டக்கேளு
கன்னலாய்த் தகடடித்துப் பின்புதானும்
காரணமாய்ச் சத்திரச பற்பஞ்சேர்த்து
இன்னிலத்திற் பழச்சாறு சாமமாட்ட
இதமாக யாகோபு சொன்னதாமே. (159)

சொன்னதொரு பழச்சாறு விட்டரைத்துச்
செழிமைபெற நொறுங்குமட்டும் புடமுமிட்டு
நன்னயமாய்ப் பார்த்தவுடன் கரிபோற்காணும்
நயமான கரிக்கிநிகர் கொடியோனைத்தான்
பன்னகமாய்ச் சேர்த்து அரை முன்சாற்றாலே
பதியஅரை புடம்போடச் சிவப்புமாகும்
இன்னிலத்தில் யாகோபு சொன்னநேர்மை
இதமாகச் சொல்லிவிட்டே னின்னங்கேளே .(160)

இதமாக வண்டிலது கொஞ்சமிட்டு
இன்பமுட னேயுருக்கப் பொன்னாய்நிற்கும்
பதமாக யேமமது ஒன்றுயிட்டுப்
பத்தியமா யுருக்கிடவே தங்கமாகும்
மதமான தங்கத்தை வித்துநீயும்
மானிலத்திற் செலவுமே செய்துகொண்டு
நிதமான ஞானத்தைப் பார்த்துத்தேறு
நிர்ணயமா யாகோபு செப்பினாரே. (161)

செப்பினதோ ரப்புஉப்பும் நேராய்க்கூட்டிச்
செயலான தங்கமதாய் நிலைத்துநின்று
ஒப்பினதோர் பெண்ணாணுஞ் சேர்ந்துதானும்
ஓவியமா யுருவாச்சவ் வுண்மைபோலே
நப்பினதோர் ரசவாத மிதுவேயாகும்
நானிலத்தில் வாதமிதை நாட்டிப்பாரு
தப்பிதம்போ காதுயா கோபுசொன்னார்
தாஷ்டிகமாய் வரிசையுடன் தனித்துப்பாரே.( 162)

வரிசைபார் அயச்செம்பு கெந்திச்செம்பு
வலுவாக வைத்துமே பிழைத்துத்தேறு
உரிசைபார் ரசகுளிகை பின்னேபாரு
உத்துமே பொருளெல்லாம் வந்துகூடும்
பிரிசையா யிந்நூலை யுடைத்துப்பாரு
பிரபலமாய்க் காயசித்தி பண்ணிக்கொண்டு
வரிசைபார் மார்க்கத்தின் வழியேசெல்ல
வகையான தொழிலெல்லாம் மார்க்கமாமே. (163)

மார்க்கமாய் மக்காவின் தேசந்தன்னில்
　　வழியோடே சென்றறிந்து வாதந்தன்னை
ஏர்க்கவே நானுணர்ந்து யித்தேசத்தில்
　　எளிதாக வைத்தியமும் தெளிவாய்ச்சொன்னேன்
காக்கவே கைபாக வரிசைகண்டு
　　காரியமாய்ச் செய்தாக்கா லுறுதியாகும்
ஊக்கமா யாகோபு சொன்ன நீதி
　　உற்றுணர்ந்து பார்த்தாக்காற் சித்தியாமே (164)

சித்தியது வேணுமென்றாற் களங்குபாரு
　　சிறப்பாகப் பலனாகும் சிறியோர்க்கெல்லாம்
புத்தியா யிருக்கவென்றாற் கெந்திச்செம்பைப்
　　பிரியமுடன் பார்த்துமே புகழ்ந்துநீயும்
நத்தியே வித்துநீ செலவுசெய்து
　　நன்னயமாய்ப் பல்லோர்க்குச் சொரூபங்காட்டு
முத்தியாம் யாகோபு மொழிந்தாரித்தை
　　மூவுலகும் மெச்சுமிது முனிந்துகாணே (165)

முனிந்துபார் முக்கியமாய் நூலைப்பாரு
　　முற்றுணர்ந்த யோகசித்தர் மொழிதப்பாது
தனிந்துமே பொருளாகும் நீதியாகும்
　　சரியான பொருளறிந்தால் வாதியாகும்
கனிந்துமே மூக்காலுங் கண்டுபாரு
　　கணக்காக ஒன்றுவரும் கருத்திற்றங்கம்
பினிந்துபார் ரசவாதம் யேவல்கேட்கும்
　　பிரபலமா யாகோபு பேசினாரே. (166)

அயக்களங்கு.

பேசிடவே யின்னமொரு செப்புகேளு
　　பிரபலமாய்ச் சொல்லுகிறேன் பெருமையாக
வாசிடவே அரைபொடியோ பலமும்பத்து
　　வகையாகப் பழச்சாற்றி லூறவைத்து
மூசிடவே மூன்றுநா ளூறவைத்து
　　முக்கியமா யெடுத்துப்பின் மூர்க்கங்கேளு
ஆசியே அரைபொடிக்கு நீலன்பத்து
　　அடைவாக யாகோபு அறைந்ததாமே. (167)

அரைத்திடவே கெந்திபது பலமும்பத்து
அடைவான வீரமது காலுமிட்டு
அரைத்திட்வே எலுமிச்சம் பழச்சாற்றாலே
அரைத்துமே வண்மையாய் வில்லைகட்டி
கரைத்திடவே கதிரில்வைத்து வில்லைமேலே
கனிந்துமே சுண்ணம்பு உப்புநேரே
உரைத்துமே அரைத்துமெள்ளக் கவசங்கட்ட
உற்றுணர்ந்து யாகோபு உரைத்தார்தானே. (168)

உரைத்தமொழி நிசமாகும் உண்மைமெத்த
உறுதியா யெடுத்துநீ யுணர்வாய்த்தானும்
பரைத்திடவே புதுக்குகையி லிட்டுருக்கப்
பளிச்சென்று சத்தாகும் வெள்ளிபோலே
கரைத்திடவே சத்தில்நிற்கும் எண்ணெய்வாங்கக்
கனிவாக யெழுநூற்றிற் கருதிச்சொன்னேன்
வரைத்ததிந்த நூலிரண்டும் ஒத்துப்பார்த்து
வகையாக யாகோபு வழுத்தினாரே. (169)

வழுத்திடவே சத்துநின்ற நிறைக்குப்பாதி
வகையாக மாடனைத்தான் பாதிசேர்த்து
தழுத்திடவே அரைத்திட்டு முன்னீராலே
தாக்கில்லை கதிரில்வைத்துப் பின்புகேளு
உழுத்திடவே பெரியபுடம் போட்டெடுக்க
உறுதியாம் செகப்புமெத்தச் செம்புமாகும்
பழுத்திடுமே லோகமுதல் எல்லாம்நீறும்
பாதையிது யாகோபு பயின்றார்தானே. (170)

தானென்ற செம்பெடுத்து உருக்கும்போது
தலமாக நாலிலொன்று தங்கஞ்சேரு
கானென்ற தங்கமிடை நாகஞ்சேரு
கருத்தாக நாகமிடை யீயஞ்சேரு
பானென்று உருக்கியே புட்டாய்ப்பண்ணி
பதிவாக உருக்கியதோ ரிடைக்குப்பாதி
நானென்ற நாத்தமது சேர்த்துநீயும்
நலமான யாகோபு அரையென்றாரே. (171)

அரைக்கயிலே சிவன்விந்து இடையேசேரு
அன்பாகப் பொற்றலையின் சாற்றினாலே
பரைக்கயிலே பெரியபுடம் போட்டுவாங்கு
பதிவாகக் கருத்ததுவும் பாரிற்றோனும்
உரைக்கயிலே கொடியோனைக் கூடச்சேர்த்து
உறுதியா யரைத்துவில்லை காயவைத்துக்
குறைக்கவே புடம்போடச் செம்புமாகும்
குற்றமில்லை யாகோபு சொன்னவாறே. (172)

சொன்னதொரு செந்தூரம் நவலோகத்திற்
சுருதிமுறை நூற்றுக்கொன் றிட்டாயானால்
நன்னயமாய் மாத்தென்ன பத்துமாகும்
நான்கண்ட படிசொன்னேன் நயந்துபாரு
இன்னிலத்தில் ரசவாதி நூலில்லாது
இதமாக வாதத்தை மிகவேசுட்டு
உன்னிக்கெட் டேனென்று சொல்லுவார்கள்
உற்றுணர்ந்த யாகோபு மொழிகள்தானே. (173)

மொழிகள்தான் செந்தூரம் பணமவ்வீதம்
முடிவான நோய்தனக்கு உடனேயீய
அழிவான நோய்களெல்லாம் அகன்றுபோகும்
ஆதியாம் உலகத்தோர் பிழைக்கவென்று
சுழிவாக யெல்லார்க்குஞ் சொன்ன நீதி
தோய்ந்திடுவான் புத்தியுன்னிச் சொல்வேன்யானும்
கழிவான அழிம்புள்ளோர்க் கில்லையில்லை
கருதினார் யாகோபு கருணைதானே. (174)

கருணையாய் மக்காவின் தேசந்தன்னிற்
காரியமாய் குளிகையிட்டு நகரிற்சென்றேன்
அருணையாய் நான்போகும் வேளைதன்னில்
அடைவாக வேதமது மூன்றுமாகும்
தருணையாஞ் சிறிதுநாள் சென்றபின்பு
தடையற்ற முகம்மதுவும் வந்துகூடிப்
பருணையாம் வேதங்கள் கூட்டச்சொன்னார்
பதிவாகக் கண்டுயா கோபுசொன்னேன். (175)

சொன்னதொரு முந்நூறிற் போக்குமெத்தச்
சொல்லரிய எழுநூற்றில் வாதமெத்த
நன்னயமா.யிவ்விரண்டும் ஒத்துப்பார்த்து
நல்லபஞ்ச மித்திரமும் முந்நூரோடு
இன்னதொரு கைபாக வரிசைபாரு
எடுத்துமே செய்திட்டால் பலனுமாகும்
கன்னல்போற் கற்றுணர்ந்த பெரியோர்தன்னைக்
கார்த்தாக்கால் எல்லாமுங் கருதிப்பாரே. (176)

கருதியே வடமொழியைப் பார்த்துத்தேறு
கனிவாக நால்வேத மாறுசாஸ்த்ரம்
சுருதியெலாம் பார்த்துணர்ந்த யாகோப்பென்பேர்
சுகுணமுள்ள பெரியோர்க ளாடுமொட்டை
பருதிமதி யுலகத்திற் சொன்னேனப்பா
பார்த்துணர்ந்து அறிந்துமே பகுத்துப்பார்த்து
வருதியா யட்டவணை கொண்டுயானும்
வகையறிந்து யாகோபு வழுத்தினேனே. (177)

வழுத்தினேன் களங்குமுதற் செந்தூரங்கள்
வகையான பற்பமுதல் லேகியங்கள்
தழுத்திடவே செம்பெடுக்கும் மார்க்கமோடு
தடையறவே உலகத்திற் சொன்னேனப்பா
இழுத்திடவே செய்பாக மீய்ந்திட்டாக்கால்
இணையில்லாப் பொய்யாகும் யிதமாம்பாரு
கொழுத்தநரி போலேநீ திரியாதென்றூர்
கொட்டினூர் யாகோபு குணமதாமே. (178)

குணமாகக் காயசித்தி யோகசித்தி
கூறுமெழு நூறுமுந் நூறுதன்னிற்
பணமாகப் பொருளெல்லாம் பகுத்துச்சொன்னேன்
பாதையிதில் வெகுபோக்குப் பரிந்துபாரு
உணவாகச் செய்தாக்கா லெல்லாமாகும்
உற்றுணர்ந்தால் உறுதியாம் உலகத்தோர்க்கு
கணமாகப் பொருளெல்லாஞ் சோதித்தாக்கால்
கருமமது யில்லையப்பா கருதிப்பாரே. (179)

கருதியே துருசினுட சுண்ணந்தன்னைக்
காட்டினேன் எழுநூற்றிற் கிருபைவைத்து
பருதியே முந்நூறிற் சொல்லிப்போட்டேன்
பலனுகு மென்வசனம பொய்போகாது
உறுதியாய்ப் பார்த்துமே செய்துகொண்டால்
உண்மையா யெல்லாமுஞ் சித்தியாகும்
வருதியா பெல்லாமுஞ் சோதித்தேறி
வழுத்தினேன் எழுநூறு வகையாய்த்தானே. (180)

வகையாக களங்கத்தை முன்னேபண்ணு
வண்மைபெறச் செந்தூரம் பின்னேபண்ணு
நகையாம லதன்பின்னே துருசுச்சுண்ணம்
நாட்டினுல் ரசங்கட்டி நன்மையாகும்
பகையாகச் சொல்லவில்லை பாருள்ளோர்க்குப்
பகுத்துணர்ந்த பாலகர்க்கும் பரிவாய்மெத்தத்
தகையாக நூலெல்லாந் தன்மைபார்த்து
தாக்கிடவே யெல்லாமுஞ் சித்தியாமே (181)

சித்தியே யாகவென்முற் கல்லுப்பைத்தான்
சித்திபெறப் பார்த்துமே உழைத்துக்கூடு
முத்தியா யழுக்கெடுத்த எண்ணெய்போலே
முழுதுமே பார்த்துணர்ந்து மொழிகள்கேட்டு
நத்தியே திரிந்தலைந்து போகாமற்முன்
நலமாக எந்தனுட நூலைப்பாரு
கத்தியே யிந்நூலைத் தேர்ந்துபார்த்துக்
கசடத்து யாகோபு கருதினுரே (182)

கருதியே மனந்தன்னை யொக்கப்பண்ணி
கற்றுணர்ந்த வல்லோரைக் கேட்டடுத்து
திருதியாம் உன்மனது திட்டமாகும்
திடமாகப் பாகமெல்லாங் கண்டுகொள்ளு
வருதியாம் வல்லமையாய்ப் பார்த்துத்தேறு
வடிவாக அழும்புள்ள புத்திவேண்டாம்
நிருதியா யுன்மூளை செலுத்திப்பாரு
நிச்சயமா யாகோபு நிசஞ்சொன்னுரே. (183)

நிசமாக யின்னமொரு களங்குகேளு
நித்தியமா மூத்தரென்ற மேனிச்சாற்றில்
வசமாக அரைத்துவில்லை காயவைத்து
வழியோடே புடம்போடச் சிவக்குமாம்பூ
தசமாக யெடுத்துமே கல்வத்திட்டு
தடையறவே இடைக்கிடைதான் தங்கமிட்டு
பிசகாம லரைத்துமே வில்லைகட்டு
பேசினூர் யாகோபு மெருமைதானே. (184)

களங்கு செந்தூரிக்க.

பெருமைதா னிடைக்கிடையே செம்பிலீயப்
பிரியமாய் வெங்கலம்போல் தகர்ந்துநிற்கும்
அருமையாய் வண்டிலது காலுஞ்சேர்த்து
அடைவாக வுருக்குநன்று யுருக்கித்தீரு
கருமையாய் வெங்கலம்போற் சத்தாய்நிற்கும்
காரணமாய்ச் சத்ததனைக் குகையிலிட்டு
வருமையா யுருக்கிடவே சொன்னேன்பாரு
வையகத்தி லென்பேரு விளங்கத்தானே. (185)

விளங்கவே சத்ததனைச் செம்புபண்ண
விருப்பமாய்ச் சித்தர்களும் சொன்னூரில்லை
தளம்பெறவே யிந்நூலில் வெளியாய்ச்சொன்னேன்
தாயகமாய்ச் சுடரதுவைத் தானேசேர்த்துப்
பழங்கதைபோ லரைத்துவில்லை கதிரில்வைத்துப்
பரிவாக மூன்றுபுடம் போட்டாயானல்
களங்கமில்லாச் செந்தூர மாகும்பாரு
கர்த்தன்யா கோபுநபி கருத்திதாமே. (186)

கருச்சொன்னூர் மதியெட்டி லொன்றுயீயக்
காரணமா யேமமது பத்துமாகும்
வருச்சொன்னு ரிவ்வேதை பார்த்துநீயும்
வழியோடே பிழைத்திருந்து கொண்டுவைப்பில்
தருச்சொன்ன போலதுபோல் மயங்கவேண்டாம்
தாட்டிகமாய் நூல்களெல்லாந் தகமைபார்த்து
குருச்சொன்ன யாகோபு குறித்தநேர்மை
குணமாகக் கண்டாக்கா லெல்லாமாமே. (187)

ஆமேதா னெல்லார்க்கும் வாதந்தன்னை
அடைவாகச் சொன்னாக்காற் பலிதமில்லை
பூமேஅஞ் ஞானிக்குத் தெரியாதப்பா
போதுமென்ற பிச்சைதனை யெடுத்துண்பார்கள்
நாமேதான் வாதங்கள் மிகவுஞ்சொல்லி
நானிலத்தில் மவுனமா யிருந்துகொண்டு
காமேதா னுலகத்தோர் குடிகெடுக்கக்
கனமான யோசனைகள் கண்டார்தாமே (188)

கண்டுமே உலகத்திற் சிலதுபேர்கள்
கனிவாக வாதங்க ளெனக்குநன்றாய்
உண்டுமே தெரியுமென்று பொய்கள்சொல்லி
உறவாக நாகந்தான் கட்டுமென்பார்
தண்டுமே சொல்லியே ரவிபழுக்கும்
தக்கபுத்தி யோசனைகள் மிக்வேசெய்து
பண்டுமே பழங்கதைகள் பேசுவார்பார்
பரிவாக அவர்களை நீ நம்பவேண்டாம். (189)

நம்பாதே பொய்சொல்லும் வாதிதன்னை
நாட்டிலே சொல்லாதே நாடித்தள்ளு
வம்பாகப் பேசுவர்கள் வயித்தியத்தை
வடிவாக யோசனைகள் பண்ணிப்பார்த்துத்
தெம்பாகத் தள்ளிவிடு அவர்களுக்குத்
திடமாகச் சோறுமுதல் போடவேண்டாம்
தம்பமா யிப்படிக்குப் புலம்புகின்ற
சண்டாள வாதியை நீ தள்ளிப்போடே. (190)

தள்ளிடவே சண்டாளக் கோபந்தன்னைத்
தடையறவே தள்ளியே சுழியிலேறி
உள்ளிடவே உள்ளவா தாரம்பத்தி
உத்துநின்ற நபிமாரைப் போற்றிசெய்து
கள்ளிடவே அடிவணங்கிக் கண்டுநின்றால்
கர்த்தாவைக் கண்டிடலாங் கருவாய்ப்பாரு
தெள்ளிட்டுத் திரியாதே நான்தான்சொன்ன
திட்டமதே தொல்லுலகில் தீர்க்கம்பாரே. (191)

அப்ரேக் செந்தூரம்.

தீர்க்கமாய் அப்ரேக்குச் செந்தூரத்தைத்
திடமாக எழுநூறிற் சொல்லவில்லை
ஆக்கமாய் மூந்நூறி லதிகவேதை
ஆண்மையா யாகுதற்குக் கைபாகத்தை
மூர்க்கமாய்ச் சொல்லுகிறேன் முத்துப்போலே
முடிவாக வொருகயத்திற் கோர்த்தாப்போலே
பார்க்குள்ளோர் அறியயா கோபுசொன்ன
பத்திமுத்தி சித்தியெலாம் பார்த்திடாயே. (192)

பார்த்திடவே அப்ரேக்கு பலமும்பத்து
பதிவான வீரமது பலமும்ரெண்டு
கோர்த்திடவே யீதிரெண்டுங் கொள்ளுச்சாற்றால்
குணமாக அரைத்துப்பார் வெண்ணெய்யாகும்
சாத்திடவே பெரியபுடம் போட்டெடுக்கச்
சரியாக நீறியே தவளம்போலாம்
வாத்திடவே யாகோபு சொன்ன நீதி
வண்மையுட னுலகோர்க்கு வழுத்தினாரே. (193)

வழுத்திடவே காரீயம் பலமும்பத்து
வடிவான அயக்கரண்டி தன்னிலிட்டு
கழுத்திடவே வெடியுப்பு அஞ்சாங்காய்ச்சல்
காரியமாய்ப் போடச்செந் தூரமாகும்
உழுத்திடவே அப்ரேக மிடைக்குவங்கம்
உன்னிதமாஞ் செந்தூரஞ் சேர்த்துக்கொண்டு
தழுத்திடவே கன்னியாங் குமரிச்சாற்றால்
தன்மையா யரைத்துவில்லை தீட்டிக்கொள்ளே (194)

தீட்டியே சிவக்கமட்டும் புடத்தைப்போடு
சிவந்துவிடுங் காரணமாய்க் கருப்பில்லாமல்
மூட்டியே செந்தூரம் நாலுக்கொன்று
முடிவான தாளகமும் மிடைபதங்கம்
தாட்டியே சேர்த்தரைத்துக் கன்னி நீரால்
தாக்கியே புடம்போடச் சிவந்துநிற்கும்
பாட்டியே போகாதே யெடுத்துக்கொள்ளு
பதிவான யாகோபு பலன்சொன்னாரே. (195)

பலனென்ன கண்டரைத்தான் செம்புபண்ணிப்
பதிவாக நூற்றுக்கு ஒன்றுதாக்கிப்
பெலமாகும் மாத்தேயெட் டரையுமாகும்
பெரியோர்கள் சொன்னதொரு நீதிதானும்
அலமாகத் திரியாதே அடுத்துப்பாரு
ஆராய்ந்து பார்த்தாலே யெல்லாமாகும்
குலமாகக் கண்டாக்கால் சுருக்கிலாகும்
குத்தமத்த யாகோபு குறிப்பிதாமே. (196)

குத்தமறச் செந்தூரந் தேனிலுண்ணக்
கொடிதான ரோகமெல்லாங் குணமதாகும்
பத்தறுமே காயமது அலரிபோலாம்
பார்த்துமே கைபாக வரிசைசெய்து
நித்தமதை யுண்டுமே நினைவுபூண்டு
நீனிலத்திற் காயசித்தி நினைவாய்ப்பாரு
முத்தரையா யாகோபு மொழிந்தவாறு
முத்திபெற்றுத் தானிருக்கச் செப்பினாரே. (197)

செப்பிடவே வாதங்கள் கைபாகங்கள்
சிறப்பாக வைத்தாக்கால் மவுனமாக
நப்பிடவே யிருந்துகொண்டு தொழிலைப்பார்த்து
நாடியே சுயவசனம் பேசிநீயும்
உப்பிடவே குணமாக யிருந்துவாழ்ந்து
உறுதிபெற நபிமாரை யடுத்துக்கொள்ளு
தப்பிதமாய்த் திரியாதே தலைகள்போகும்
சரியாக நீநடக்கத் தன்மையாமே. (198)

ரசக்களங்குச் செந்தூரம்

தன்மையாய்க் கொடுக்குமுன்னே பழுப்பதற்குத்
தாட்டிகமா மின்னமொரு தகமைகேளு
உண்மையாய் வடமதுவும் பலமும்பத்து
உறுதியுற்ற வளையமது நாலாறுகும்
கண்மையாய் அன்னமென்ற பேதிதானும்
கருத்தாகப் பலமொன்று நிறுத்துக்கொண்டு
வண்மையா யுரலிலிட்டு யிடித்துவாலை
வகையாக அடைத்துமே சட்டிமூடே. (199)

மூடியே முன்னீரைத் தள்ளிப்போட்டு
முடிவான கடைநீரை வடித்துக்கொண்டு
தேடியே குப்பிரெம்ப நிரப்பி நீயும்
திடமாகச் சூதமது சேருவொன்று
காடியே அதிலூத்தப் புகைநீர்தன்னைக்
கணக்காகப் பொறிந்துவிடுங் காளான்போல
கோடியே திரவியமாம் பார்த்துக்கொள்ளு
குணமாக யாகோபு கொட்டினாரே. (200)

கொட்டியே பூத்தரசந் தன்னைவாங்கிக்
குணமாகக் குப்பியிட்டு யெரித்துக்கொள்ளு
பட்டியே சிவப்பாகுஞ் சிவப்புதன்னைப்
பதிவாகப் புறம்பாக வைத்துக்கொண்டு
துட்டியே கண்டரைத்தான் செம்பெடுத்துத்
துடியாகக் குகையில்வைத் துருக்குப்போது
கட்டியே சத்தியது இடையேதாக்கு
கனமாக நொறுங்கியது சத்துமாமே (201)

சத்தெடுத்து மாடனைத்தான் பாதிசேர்த்துச்
சரியாகப் புகைநீரா லரைத்துக்கொண்டு
வித்தெடுத்து வில்லைகட்டிக் கதிரில்வைத்து
விதமாகப் புடம்பெரிதாய்ப் போட்டுத்திரு
கத்தெடுத்துப் பத்துபுடம் போட்டெடுக்கக்
காரணமாய் முருக்கம்பூப் போலாஞ்செம்பு
சித்தெடுத்துப் புறம்பாக வைத்துக்கொள்ளச்
சித்திபெற யாகோபு திடஞ்சொன்னாரே. (202)

திடமாகச் சொல்லுகிறேன் நத்திக்கேளு
திட்டமாய்ச் சூதச்செந் தூரம்பத்து
நடமான சத்துச்செந் தூரம்பத்து
நாட்டியே யீதிரண்டுங் கல்வமிட்டுப்
படமான புகைநீரை மூங்கவிட்டுப்
பார்த்தரை நீ இருசாமம் மைபோலாகும்
தடமான உமிநெருப்பில் வறுத்துப்போடத்
தன்மைபெற யாகோபு தாக்கினாரே. (203)

தாக்கியே காசியென்ற மேருக்கிட்டுத்
தாட்டிகமாய்ப் பனிரெண்டு சாமந்தீதான்
நோக்கியே யெரித்துயெடு முருக்கம்பூப்போல்
நுட்பமாய்ச் சிகப்பென்ன கண்கொள்ளாது
பாக்கியம்வந் துற்றதுபோ லெடுத்துக்கொண்டு
பக்குவமா யிதைவெளியிற் பகர்ந்திடாதே
வாக்கினுற் சொன்னதொரு நீதிமார்க்கம்
வகைகண்டால் துகைகாணும் வடிவாம்பாரே(.204)

வடிவான நவலோகம் நூற்றுக்கொன்று
வணக்கமாய்க் கொடுத்திடவே தங்கமாகும்
முடிவான வாதமிது முத்தியாகும்
மூர்க்கமா யெல்லாருஞ் செய்யப்போகா
குடியாஞேன் செய்தாக்கா லிடியும்வீழும்
குணமாகப் பெரியோர்கள் செய்வார்பாரு
துடியான வாதியார் செய்யாமூடர்
துப்பறவாய்ப் படபடப்பாய்த் தோய்ந்துய்வாரே.( )

தோய்ந்துமே பாராத வாதிதானும்
தொல்லுலகில் வாதம்வரு மென்றுசொல்லிப்
பாய்ந்துமே சரக்கைத்தான் கடையில்வாங்கிப்
பதிவாகச் சுட்டுமே பணம்போச்சென்று
சாய்ந்துமே சொல்லியே அலேகுவார்கள்
சாடையாய்ப் பின்னேயுந்தான் பார்த்துக்கேட்டு
ஆய்ந்துமே யிந்நூலேப் பொய்யென்பார்கள்
அடைவிலா வாதிதா னுடுவாரே. (206)

ஆடுவார் வாய்ப்பேச்சால் பேசுவார்கள்
ஆதியாஞ் சரக்கைத்தான் கட்டவென்று
நீடுவார் மூலிகையைப் பிழிந்துகொண்டு
நிலேயாகச் சுருக்கிட்டு நிகடம்வைத்துப்
போடுவார் ரவிபழுக்கு மென்றுசொல்லிப்
பூப்புடமுஞ் செய்வனென்று புலம்புவார்கள்
காடுவார் வீடதனி லிருக்குதென்று
கருத்தொட்டுப் பார்த்துமே அலேகுவாரே. (207)

அலையாமற் செந்தூரம் வைத்துக்கொண்டு
அன்பான ரவிதனிலே கொடுக்கயேமம்
உலையாமலிதைவித்துச் செலவுசெய்து
உண்டுடுத்திப் பின்புதான் செந்தூரத்தைத்
தலையாமல் பணவிடைதான் உண்டுதேறு
தாக்கிடவே காயமது கற்றாணும்
அலையாமல் யாகோபு சொன்ன நீதி
அவனிதனில் வணங்கியே வாழ்வீர்தானே. (208)

வெடியுப்புச் சுண்ணம்.

தானென்ற யின்னமொரு செய்புமார்க்கம்
தாட்டிகமாய்ச் சொல்லுகிறேன் தகமைகேளு
வானென்ற வடமதுவும் பத்துப்பின்னும்
வகையான வளையமது பலமும்பத்து
கானென்ற புளியுமொரு பலமும்பத்து
கடிதாகக் கல்லுரலி லிடித்துப்பின்பு
பானென்ற புதுச்சட்டி அடுப்பிலிட்டுப்
பக்குவமா யாகோபு பாகங்கேளே. (209)

பாகமா யெரியிடவே சாமமாகப்
பயின்றபின்பு தானெடுக்கப் பதிவாஞ்சுண்ணம்
பாகமா யெடுத்துமே பனியில்வைக்கப்
பாங்காகப் பளபளெனச் செயநீராகும்
தாகமாய்ப் புகைநீரி லிடையேவிட்டுத்
தாட்டிகமாய் வீரமொடு பூரமிட்டு
யோகமாய் வைத்துமே சொல்லக்கேளு
உத்துணர்ந்து யாகோபு ஓதினாரே. (210)

ஓதினாரின்னூறிற் சரக்கெல்லாந்தான்
உணவாகத் தோய்த்துமே வாட்டக்கட்டும்
கோதினர் லவணமுத விருபத்தைந்தும்
குணமாகக் கட்டாகும் மெழுகுமாகும்
வாதிகள்தான் வைக்காமல் மூலிதன்னை
வகையாகப் பிடுங்கியே சரக்கிலூத்தி
மேதினியிற் கட்டியே சரக்குதன்னை
மிதமாகச் செய்புதனிற் கொடுப்பார்பாரே. (211)

நாகக்கட்டு

கொடுப்பார்கள் நாகமொரு கட்டுச்சொல்வேன்
குணமாகுங் குற்றமறக் கூர்ந்துபாரு
வடுப்பார்கள் இலுப்பெண்ணெய் தன்னிலேதான்
வகையாக இருபத்தே திரமும்சாய்த்து
தடுப்பாகச் செயநீரி லுருக்கிச்சாய்க்கத்
தாட்டிகமாய்ப் புகையடங்கும் தன்மையாகும்
படுப்பாகத் தகடடித்துக் கல்லுப்பைத்தான்
பதிவாக மேற்கவசங் கட்டத்தானே (212)

கட்டியே புடமிட்டு யெடுத்துப்பாரு
கருணைபெறக் கரிபோலத் தூளுமாகும்
பட்டியே தூளினிடை சாரஞ்சேர்த்துப்
பதிவாக அரைத்துருக்க மணியுமாகும்
தெட்டியே மணிதன்னை உடைத்துப்பாரு
திடமாக வெள்ளிபோ லிருக்குமப்பா
குட்டிபோ லின்நாக மணிகள்தானும்
கூறினார் யாகோபு குணமாய்த்தானே. (213)

நாகச்செந்தூரம்.

குணமாக நாகமணி தன்னைத்தானும்
கூட்டியே கரியில்வைத்து உருக்கும்போது
மணமான தங்கத்தை யிடையேதாக்க
மடிந்துமே யிரண்டுமொன்றாய்ச் சேர்ந்துநிற்கும்
பணமாகத் தகடடித்துக் கெந்திவீரம்
பாய்ச்சியரை தகட்டின்மேற் பூசிப்பூசி
உணவாகப் புடம்போடக் கருப்புமாகும்
உரைசெய்தார் யாகோபு ஒழுங்கிதாமே. (214)

ஒழுங்காக யெடுத்துமே செம்புநூறு
உத்துமே உருக்கியபின் சொல்லக்கேளு
தழுங்காக ஒன்றாயிடத் தரணியோர்க்குத்
தாட்டிகமா யிருபதின்மே லஞ்சுமாத்து
வழுங்காகப் பெரியோர்கள் செய்வாரப்பா
வாதிக்கும் பத்தாகும் மகிழ்ந்துதேறு
கழுங்காம லிவ்வேதை உறுதியாகும்
கற்றுணர்ந்த யாகோபு கருதினாரே. (215)

கருதியே உலகத்திற் சிலதுவாதி
காரணமாய் நாகத்தைக் கொண்டுவந்தால்
பருதியுள்ள மட்டுக்குந் தங்கஞ்செய்வேன்
பாரென்று நாகத்தை உருக்கிச்சாய்த்து
அறுதியா யதையெடுத்து வைத்துக்கொண்டு
அறிந்தவர்போல் மறைவாகக் கையில்வைத்து
உறுதியாய்ப் பொன்னுச்சு தென்றுசொல்லி
உலுத்தரவர் திரிவார்கள் உற்றுப்பாரே. (216)

உத்துமே சிலதுபேர் சாலக்காரர்
உண்மையாய் நான்கண்டே னென்றுசொல்லி
அத்துமே சொல்லியே புலம்புவார்கள்
அவர்களுக்குப் பொன்னில்லை அலைவாரப்பா
கத்தியே செய்திட்டுத் திரிவானப்பா
கண்டிடுமே செம்புநீ கருத்திலேதான்
சித்தமதி லுலகத்து மானிடர்க்குச்
சித்தமாய்ச் சொல்லிவிட்டேன் பண்பாய்த்தானே

பண்பாக எழுநூறு முன்னேபாரு
பகர்ந்ததொரு முந்நூற்றைப் பத்திப்பாரு
நண்பாய்ச்செந் தூரமுந் நூறுப்பின்பார்
நானிலத்திற் பார்த்தறிந்து வாதம்பார்த்தால்
உண்மையா யுருத்தோடே ஞானந்தன்னை
உலகத்தில் நீதியா யுற்றுப்பாரு
கண்பார்வை செய்திட்டுக் களங்குசெய்யக்
காரியமா யாகோபு கருதினுரே. (218)

கருத்தாக எந்நூலைக் கண்டுபார்க்கக்
கருத்துணர்ந்து செய்பெல்லா மெடுத்துப்பாரு
பொருத்தாகக் கைபாக வரிசையாலே
புக்கியே சாஸ்திரத்தைப் பொருந்தப்பார்த்துத்
திருத்தியே செந்தூரஞ் செய்துவுண்ணச்
சித்தியாஞ் சகலமுந்தான் சித்தியாகும்
வருத்தியே நூலில்லா வாதம்பார்த்து
வழிதெரியா திருந்ததினுல் மார்க்கமேதோ. (219)

மார்க்கமா யெழுநூறு முன்னே சொன்னேன்
வகார நூல் முந்நூறு பின்னேசொன்னேன்
தீர்க்கமா யிதிலிருந்து களங்குசெய்வாய்
திகழ்பஞ்ச மித்திரமுந் நூறுசொன்னேன்
ஏர்க்கவே மூன்றுநூல் தன்னைப்பார்த்து
எய்தியதோர் சரக்கினுட பொருளறிந்து
பார்க்குள்ளே செய்தாக்காற் பலனுமாகும்
பகுத்தறிந்து செய்பெல்லாம் பரிவாய்ப்பாரே. ()

பரிவாகப் பகுத்துணர்ந்த பெரியோர்பாதம்
பக்குவமாய்க் கண்டுமே பாதந்தன்னைத்
தெரிவாகப் பிடித்துமே தோய்ந்துகேளு
செப்புவார் களங்குமுதற் செந்தூரங்கள்
விரிவாகக் கேட்டுமே காத்துக்கொள்ளு
மேன்மையாங் கண்டுணர்ந்து யிருந்துபாரு
சரியாகக் கைபாக வரிசையெல்லாம்
சாதித்தால் லோகத்திற் சார்ந்துகொள்ளே (221)

சார்ந்துமே கெந்தியைத்தான் நித்தம்பூசிச்
சரியான களங்குமுதற் செந்தூரங்கள்
வார்ந்துமே பாகமாய்ச் செய்துகொண்டு,
வகையாகச் செய்பெடுத்து மதியில்தாக்கு
கூர்ந்துமே சுடரொளியைக் கண்டுதேறு
குணமாகும் வாதமெல்லாம் நொடிக்குள்ளாகும்
பார்ந்துமே பகலிரவாய்த் தோய்ந்துபார்த்துப்
பதிகண்டு பக்குவமாம் பாரிலோர்க்கே. (222)

பாரிலே யிருப்பதற்கு வாதம்வேணும்
பக்குவமாய்ப் பொருள்வேணும் பண்புகேளு
ஊரிலே நீசெய்யும் வாதமார்க்கம்
ஒருவருக்குந் தெரியாம லிருக்கவேணும்
வேரிலே ஜலம்விட்டாற் றுளுக்குப்பாரு
வேதாந்தி யாயிருந்து காலந்தள்ளு
காரிலே கண்டபே ருடனேசொல்லிக்
கண்கெட்டுத் திரியாதே கருத்தாய்ப்பாரே. (223)

கெந்தக பற்பம்.

கருத்தாகச் சத்திபற்பந் தன்னைக்கேளு
கனிமாங்காய்ப் பாற்சோறு தானெடுத்து
வருத்தாகக் கல்வத்தி விட்டுநன்ருய்
வடிவாக நெல்லிசத்தி தன்னையிட்டு
உருத்தாக அரைத்துமே சாமம்நாலு
உண்மையா யரைத்துவில்லை கதிரில்வைத்துத்
திருத்தமாய் மேற்கவசஞ் சொல்லக்கேளு
திடமாக யாகோபு சொன்னவாறே. (224)

சொன்னநொரு கல்லுப்புச் சேருநாலு
சுகமாகக் கல்வமிட்டு மேனிச்சாறு
நன்னயமா யரைத்துகடல் நுரையைச்சேரு
நலமாக இரண்டுமொன்ருய் நேகவாட்டி
கன்னலாய் வில்லைகட்டி உலையிலூதக்
கடுஞ்சுண்ணங் கல்லுப்புச் சுண்ணமாகும்
பின்னமில்லா மற்ருனே மேனிச்சாறு
பிலக்கவிட்டுத் தானரைத்துப் பின்புகேளே (225)

பின்பாக மூன்வில்லை மேலேதானும்
பிரியமுடன் கவசமது வலுவாய்ச்செய்து
அன்பாகக் காயவைத்துப் புடத்தைப்போடு
ஆறியே யெடுத்து நீ பார்க்கும்போது
நன்பாகத் தும்பைப்பூப் போலாம்பற்பம்
நாடியே யெடுத்தபின்பு நாட்டக்கேளு
தின்பாக ரவியுருக்கி யதிலேதாக்கு
திடமாகப் பொன்னுகும் செல்வமாமே (226)

செல்கவே செம்பதுவும் பழுத்துப்போகும்
செப்பரிது வித்துமே செலவுசெய்து
மல்கவே ஞானவழி யடுத்துப்பாரு
மனதோடு வாசியோ கத்தைப்பாரு
நல்கவே ஒருவருக்குஞ் சொல்லவேண்டாம்
நாட்டியே உண்டுடுத்தி நலமதாகச்
சொல்கவே பார்த்துணர்ந்து அறிவிற்கூடு
சுகமுணர்ந்த யாகோபு சொல்லிட்டாரே. (227)

சொல்லிடவே செப்புமுத லெல்லாம்பார்த்துச்
சுருதியுடன் கைபாக வரிசைகண்டு
கல்லிடவே குளிகைமுதல் செந்தூரங்கள்
கனமான பொருளறிந்து கண்டுதேறி
வல்லிடவே மக்காவின் நாட்டைவிட்டு
வழியோடே கீழ்தேசம் வந்துதானும்
புல்லிடவே யெளியோர்க்காய் வாதஞ்சொன்னேன்
புவியிலுள்ளோ ரிதையறிந்தாற் பெலனுண்டாமே.

பெலமாகப் பாஷாண மெல்லாந்தானும்
பிரித்துமே கசடகற்றிச் சத்துப்பண்ணி
வலமாகச் சத்தையெடு செப்புபண்ணு
வழியோடே மதிதனிலே பாய்ச்சிப்பாரு
'அலனுக யேமமாம் அடுத்தடுத்து
அடைவாக வித்துமே செலவுசெய்து
கலனில்லா ஞானங்கள் பார்த்துத்தேறு
கர்த்தாவைத் துதியென்று சொன்னூர்பாரே.! (229)

சொன்னதொரு மூந்நூறி லெல்லாஞ்சித்தி
சுருதிமுறை யறியாட்டா லெல்லாம்பாழாம்
கன்னலுற நீதிதனே அறிந்தால்ஞானி
கருத்தறியா ஞானிதான் கழுதைமேக்கி
இன்னிலத்திற் சரக்கதனே யறியாவாகி
யிடும்பான புத்தியிலார்க் கின்பமில்லை
நன்னூலை யறியாதார் நலமிலாதார்
நாட்டியே யாகோபு நவின்றவாறே (230)

அயக்களங்கு.

நவின்றிடவே இன்னமொரு இரும்பின்மார்க்கம்
நலமான ஒழுகரைதான் பலமும்பத்து
கவின்றிடவே துருசியது பலமுப்பத்துக்
கலமாக ராவியிதைக் கல்வத்திட்டுத்
தவின்றிடவே சத்தியது பலமுழக்கால்
தன்மையா யிட்டுபழந் தன்னுலாட்டி
உவின்றிடவே புதுக்குகையி லிட்டுருக்கு
உண்மையா யாகோபு உரைசெய்தாரே. (231)

செய்திடவே சத்தாகும் வண்டில்கூட்டிச்
செழுமைபெற உருக்கிடவே மணிபோலாடும்
பைதிடவே இச்சத்தின் மகிமைதன்னைப்
பரனாலும் முடியாது மற்றோர்காணார்
வெய்திடவே சகலமுந்தா னிதுக்குள்ளாகும்
வேதாந்த மார்க்கத்துக் கிதுவேயாதி
நைதிடவே செம்பில்நின்ற சத்தெடுக்க
நாட்டினார் யாகோபு நலமதாமே. (232)

நலமாகச் சத்தததுவும் பலமும்பத்து
நாட்டியெடு சுடர்காளை பாதியிட்டுப்
பெலமாக அரைத்துவில்லை கதிரில்வைத்துப்
பின்பதற்கு மேற்கவசஞ் சொல்லக்கேளு
வலமாகக் கடல்நுரையும் கல்லுப்புந்தான்
வடிவாக இடைசமனாய்ச் சேர்த்துக்கொண்டு
கலமாக மேனியிலைச் சாற்றாலாட்டிக்
கணக்காகப் புடம்போடச் சுண்ணமாமே. (233)

சுண்ணமா முன்வில்லை மேலேகட்டிச்
சுருக்காகக் காயவைத்துப் புடமுமிட்டு
நன்னயமா யெடுத்துமே கல்வத்திட்டு
நாடியே முன்னீரா லரைத்துக்கட்டிப்
பின்னமாய்ச் செய்யாமற் புடமுமிட்டு
பேசாம லெடுத்துப்பார் செந்தூரிக்கும்
சொன்னபடி மாத்தாகுஞ் சொன்னேன்சொன்னேன்
சுருதிபெற யாகோபு சொன்னவாறே (234)

சொன்னதொரு செந்தூரஞ் செம்பிலிட்டால்
தொல்லுலகில் ரசவாதந் திடியுமாகும்
நன்னயமாய்ப் பேசார்கள் பெரியோர்தானும்
நாட்டிலே சொல்லார்கள் நல்லோருக்குப்
பன்னவே சொல்லுவா ரிந்தவித்தை
பார்ப்பார்க ளனேவோரும் படிப்புள்ளோர்கள்
வன்னமாய்த் தொழிலாகும் வாதவித்தை
வையகத்தில் யாகோபு வகைசொன்னாரே. (235)

வகைசொன்ன உலகத்தில் வாதிகானும்
    வடிவாக மாத்துகள்தான் நிரம்பவேணும்
பகையென்ன பேராசைப் பட்டுப்பட்டுப்
    பாரிலே திரிந்தலைந்து பட்டுப்போவார்
நகைசெய்து திரிவார்கள் நானிலத்தில்
    நாடிமிகப் பேசிபல கோடிகோடி
துகையாக வைப்பமென்று பேசுவார்கள்
    துடியான யாகோபு சொன்னவாறே. (236)

வாரேது யென்ருக்கால் சொல்லக்கேளு
    வடிவான ஒருமாத்து நபிமாராகும்
தாரேது மாத்துத்தா னிரண்டானுக்கால்
    தக்கதொரு இறைவனுந் தாணியோர்க்குக்
கூரேது ஞானவான் பேருக்குத்தான்
    குணங்கண்டு பொன்னோடே பொன்னைச்சேர்த்து
வாரேது லாபம்வரச் சொன்னாரிந்நூல்
    வடிவான பொருளதுவாம் வண்மைபாரே. (237)

வண்மையாய்ப் பொய்சொல்லார் நிலைத்தவாதி
    வடிவான பொருளறியார் பொய்கள்சொல்வார்
உண்மையாய்ப் பொருளைத்தான் கேட்பாரப்பா
    உறுதிபெற்ற பெரியோர்கள் கேட்கமாட்டார்
தண்மையாய்ச் சொல்லிடுவார் சவுங்கவாதி
    தாக்கிமிகப் பேசிடுவார் ஒன்றுமில்லார்
பண்மையாய்க் குணங்களுடை யோருக்கெல்லாம்
    பாரிலே பதவியில்லை பண்புமாமே. (238)

பண்பாக ஆண்டவனைத் துதியேசெய்து
    பத்திமுத்தி வைராக்யம் பண்ணிக்கொண்டு
பெண்பார்வை யில்லாமல் வாதத்தன்னைப்
    பெரியவரா யெண்ணியே பின்புநீயும்
உன்பார்வை செய்துமே செம்புதன்னை
    உறுதிபெற யெடுத்துமே ஒழுங்கதாக
நண்பாகச் செய்திடுவா யென்றுசொன்னார்
    நலமான யாகோபு நவின்றிட்டாரே. (239)

நவின்றிட்ட மொழிகேட்டு நபிமாரெல்லாம்
நாடியே வாதமிகச் செய்துகாட்டக்
கவின்றிட்ட அடியேனுங் கற்றுக்கொண்டு
கானகத்தி லேகியே கணக்கைப்பார்த்துத்
தவின்றிட்டசாத் திரத்தினட்ட வணையைக்கொண்டு
தடையறசாவ் திரமுஞ்சூவ் திரமும்பாடி
துவின்றிட்ட தொல்லுலகில் சொன்னேனப்பா
திடியான யாகோபு தோய்ந்திட்டேனே. (240)

தோய்ந்திட்டேன் ஆதியிலே ராமதேவன்
துடியான மக்காவின் தேசம்புக்கி
ஆய்ந்திட்டேன் அவ்வேதந் தன்னிற்புக்கி
ஆராய்ந்து யிறசூலைக் கண்டுபோற்றிப்
பாய்ந்திட்டேன் குளிகையிட்டுப் பறந்துபோனேன்
பாகமாய்ச் சொன்னதொரு செப்புதன்னை
வாய்ந்திட்ட மாயெடுத்து வாதம்பார்த்தேன்
வடிவாயா கோபென்றே வாழ்த்தினாரே. (241)

வாழ்த்தினார் சொர்னமய மாகவென்று
வளமான வாதமெல்லாம் கேட்டுக்கொண்டு
பாத்தியே பதிவான சத்துச்சொன்னேன்
பாருலகில் நபிமாரைப் பத்தித்தேறி
காத்தியே குளிகைகட்டி விந்துருக்கிக்
கனமான பெருளெல்லாங் கண்டுதேறி
தாழ்த்தியே யிகபரத்துக் கொப்பாய்ச்சொன்னேன்
தாட்டிகமா யாகோபு தன்மைதானே. (242)

தாம்பூரக்களங்கு.

தண்மையாம் ஊரலென்ற பரியின்செப்பு
தாட்டிகமாய் வாதிக்குப் பார்க்கக்கேளு
உண்மையாய் ஊறலென்ற பரிதான்பத்து
உத்துமே குகையிலிட்டு உருகும்போது
கண்மையாய்ச் சத்தியுடன் சிகரஞ்சேர்த்துக்
கனிவாக அரைத்தவுண்டை யிடைதான்தாக்க
வண்மையாய் மடிந்துஅது சத்துமாகும்
வளமாக யாகோபு வகைசொன்னாரே. (243)

வகையாக வண்டிலிடு பாதிதானும்
வைத்துரைப்பார் கவ்வமிட்டுப் பாணியாலே
துகையாக அரைத்துவில்லை கட்டும்போது
துடியாகக் குகைதன்னி லிட்டுப்போடு
பகையாக உருகியது மணிபோலாகும்
பாலித்துக் கசடகற்றிப் பதிவைக்கேளு
நகையாகக் கல்வமிடு வென்றுசொன்னார்
நானிலத்தில் யாகோபு நடக்கைதானே. (244)

நடக்கையாஞ் சுடர்க்கொடியோன் பாதிசேர்த்து
நல்லதண்ணீர் தன்னாலே அரைத்துவில்லை
படர்க்கையாய்க் கட்டியே கதிரில்வைத்துப்
பரிவாகப் பெரியபுடம் போட்டெடுக்க
வடக்கையாய்க் கருப்பாக யிருந்துதானால்
வடிவாக இன்னமொரு புடமுமிட்டுத்
துடக்கைத்தான் நீக்கிடச்செந் தூரமாகும்
துடியாக யாகோபு சொன்னவாறே. (245)

வாறேது வென்றுக்கால் சொல்லக்கேளு
வகையுள்ள நவலோகந் தன்னிலீய்ந்து
காறேது பொன்னாகும் பொன்னைத்தானும்
கண்டுகொள்ள மாத்ததுவும் பத்துமாகும்
தூரேது கேணிபோ லிறைக்கும்பாரு
துடியான சொர்னத்தை வித்தேயுண்டு
சாறேது ஞானங்கள் மிகவும்பார்த்துத்
தாட்டிகமா யாகோபு தாக்கினாரே. (246)

தாக்கிப்பார் பெரியோர்கள் சொல்லமாட்டார்
தருதுரும்பன் சொல்லிடுவான் குடும்பவாதி
தூக்கிப்பார் பாகத்தை யறியாமூடர்
துடியாகப் பொய்சொல்வார் மார்க்கமில்லார்
நோக்கிப்பார் கொடுமைசெய்வார் காதலாக
நொடிக்குமுன்னே பிரட்டுகளைக் கொண்டுசெய்வார்
ஊக்கிப்பார் உருட்டுகளைச் சொல்லிச்சொல்லி
உறுதிமிக வாராமற் றிரிவார்தானே. (247)

திரியாமற் பித்தளையைச் செம்புபண்ணித்
திட்டமா யுண்டுடுத்தித் திரிந்துநீயும்
பிரியமாய் ஞானங்கள் மிகவும்பார்த்துப்
பேசாமல் வாய்மூடு இந்நிலத்தில்
துரிதமாய்த் திரிந்தாக்கால் தோயாதப்பா
துப்பறவா யடுத்துமே பழகவேணும்
சரியாகப் பார்த்திடவே தடையுமில்லை
சல்தியா யாகோபு சொன்னவாறே. (248)

சொன்னதுதா னதியிலே கருவும்பாடித்
தோயவில்லை யென்றுமே மறுவேதத்தில்
இன்னிலத்திற் றிரிந்துமெழு நூறும்பாடி
இரண்டுவகை மூந்நூறும் பாடித்தீர்ந்து
நன்னயமாய்ச் சத்துவகை செம்பும்பாடி
நயமாகக் குளிகையுட திறமும்பாடி
தன்னிலே பார்க்கும்வகை தன்னைப்பாடி
தடையறவே மலைகுகையி லிருந்திட்டேனே (249)

இருந்திட்டேன் மலைகளெல்லாந் திரிந்துசுற்றி
யிதமாக அந்தந்த நிலையுங்கண்டு
கருந்திட்ட பெரியோரைக் கண்டுபேசிக்
கலக்கமத்து வினையங்க ளெல்லாம்பார்த்து
அருந்திட்ட ஆதாவாய்ப் பாகஞ்சொன்னேன்
அடியான ஆதிமுதல் செந்தூரிக்க
வருந்திட்ட மவரவரின் வினையம்பாரு
வடிவான யாகோபு சொன்னவாறே. (250)

சொன்னபடி வடமொழியைப் பார்த்துத்தேறி
தோய்ந்துமே கைபாக மாகப்பாடி
இன்னபடி யென்றெழுதி இதமாய்ச்சொன்னேன்
இதமான புத்தியுள்ளோர் அறிந்துகொள்வார்
கன்னல்போ லென்னூலைக் கண்டுதேறி
கணக்காகச் செய்தாக்காற் பலனுமாகும்
நன்னயமாய்ப் பாடிவைத்த நூல்களெல்லாம்
நாயகமா மிந்நூலும் நட்புதானே. (251)

நட்பாக பொருளறியச் சுட்டுவாதி
நாடியே நான்செய்வே னென்றுசொல்லி.
மெட்பாகப் பொய்யுரைத்துத் திரிவாரப்பா
மேதினியி லவர்பேச்சை நம்பவேண்டாம்
உட்பாக உரைத்த உப்பு விழிபோலாகும்
உண்மையில்லார்க் கொன்றுமில்லை உலுத்தமாடு
புட்பாகந் தெரியாது பொல்லாவாதி
புரட்டுகளைச் சொல்வார்கள் பிரட்டாய்த்தானே ( )

பிரட்டாகச் சொன்னதினுர் பலன்தானேது
பெரியநபி யென்றபிர தாபமேது
திரட்டாகப் பாடியதாற் பலன்தானேது
திட்டிவைத்துத் திறந்தாலே ஞானமேது
விரட்டியே திரிந்தலைந்தால் யோகமேது
விதமான பொருளில்லா விடுபட்டோடும்
கரட்டாகச் சொன்னதினுற் பலன்தானேது
காடுறைந்த கருவாளி காண்பான்பாரே. (253)

காணவே பொருளில்லா வாதமேது
கைக்கடங்காப் பிள்ளைக்குக் கருத்தங்கேது
பூணவே பூணும் பூணர்க்கேது
பொல்லாதார்க் கொன்றுமில்லை பிரியமுண்டோ
வாணவே வடிவில்லான் ஆசையேது
வகையறியார் துகையறியார் வழக்கமேது
தோணவே நடப்பதற்குப் பாதமேது
துடியாதார்க் கொன்றுமில்லை தீர்க்கந்தானே.( 254)

தீர்க்கவான் யாகோபு சொன்ன நீதி
செகந்தனிலே ரிஷிகள்சித்தர் யோகிக்குத்தான்
மார்க்கமாய்த் தெரியாது தெரிந்துதானுல்
மயமாகச் சொல்வார்கள் வாதமார்க்கம்
ஏர்க்கவே பேசிடுவா ரினிமையாக
இடும்பாகப் பேசியதால் வாதம்பொய்யாம்
பார்க்குள்ளே யிருக்குமட்டும் பலமதாகும்
பத்திதரும் யாகோபு பலன்சொன்னுரே. (255)

வெள்ளிக்களங்கு.

சொன்னதொரு களங்கெல்லாம் மெய்யதாகும்
சுருக்கான வெள்ளியதிற் களங்குகேளு
நன்னயமாய்ச் சொல்லுகிறேன் உலகத்தோர்க்கு
நாட்டினுல் ரசவாத முண்டுகாணும்
இன்னிலத்தி லிருக்குமட்டும் வைத்துப்பாரு
இன்பமாய் நிற்பதற்கு நொருக்குவெள்ளி
கன்னல்போற் கடைசிதனிற் சொல்வேன்யானும்
கற்றுணர்ந்து யாகோபு கருவாய்ச் சொன்னேன். ()

கருவாகக் கருக்கன்வெள்ளி பலமுஞ்சேரு
கனிவாக உருக்கியே கட்டியாக்கி
வருவாக ஆட்டெலும்பு பலமும்பத்து
வகையாகச் சுட்டுமே மாறக்கேளு
தருவாகச் சுக்காணும் பாதிசேர்த்துத்
தனையரைத்து நிகடையது பண்ணிக்கொண்டு
உருவாக அதில்வைத்து உருக்குவெள்ளி
உண்மையா யிடைக்கிடைதான் வங்கஞ்சேரே. ()

வங்கமென்ற நல்லீயங் கருக்கன்வெள்ளி
வகையாக உருக்கயிலே முகத்திற்ருக்கி
சிங்கமாய்ச் செம்புதனைத் தள்ளிப்போடும்
சிறக்கவே வுள்ளேதான் புகுந்துகொள்ளும்
தங்கமது செம்புதன்னைச் சுத்திவாங்கி
தருகாது ஊதினபின் னூத்தினுலே
பங்கமாய்ப் பண்ணியே செம்பையிட்டுப்
பதிவாக மதிதரையில் பசுமைபாரே. (258)

பசுமையாம் வெள்ளிதனைத் தகடுதட்டிப்
பத்தலது சிகாமது இடையேசேர்த்து
வசுமையாய்க் கைத்தபழம் பாலைவிட்டு
வடிவாக இருசாம மரைத்துக்கொண்டு
தசுமையாய் மூந்நூறும் வெள்ளிதன்னில்
தாக்கியிடு மேற்கவசங் கட்டிப்போடு
உசுமையாய் அட்டைபோற் சுருங்கிப்போகும்
ஓதினர் யாகோபு ஒழுங்கிதாமே. (259)

ஒழுங்காக இப்படிக்குத் தடவிமூன்று
    உறுதியாய்ப் புடம்போட்டு உடைத்துப்பாரு
நழுங்காக வெட்டையாங் கரிபோற்றேனும்
    நாடறிய அதைக்கல்வந் தனிலரைத்து
வழுங்காமல் வழித்துவில்லை காயவைத்து
    வழியோடே புடமிடவே கருப்பதாகும்
தழுங்காமல் யாகோபு சொன்ன நீதி
    தாட்டீக மாகவே திடஞ்சென்னுரே. (260)

திடமென்ன கரியாகும் வெள்ளிக்குத்தான்
    திறமான ஆலாத்தி பாதிசேர்த்து
படமென்ன வாய்நீர்விட் டரைத்துவில்லை
    பதிவாக இப்படிக்கு மூன்றுபோட்டு
கடமென்ன கரியில்வைத்து வண்டில்கூட்டிக்
    காரியமாய் நசிக்கிபொடி யாக்கிப்பின்பு
விடமாக உருக்கிடவே வெள்ளியாகும்
    விருதாவாய்க் குறையாது விருப்பமாமே. (261)

விருப்பமா யிந்தவெள்ளி மூத்துப்போலே
    வீரியமா யுருக்கியே தகடுதட்டித்
திருப்பாகக் கரியோட்டிற் புளிகரைத்துத்
    திறமாகக் கெந்தியது பாகமாகத்
தருப்பாகச் சேர்த்துமே பழுக்கச்சுட்டால்
    தாட்டிகமாய்த் தங்கம்போற் பழுக்கும்நன்றாய்
குருக்கிடையுங் கருக்கிடையும் பார்த்தால்வாதம்
    குணமாகும் மணமாகுங் கூர்ந்துபாரே. (262)

கூர்ந்துபா ரிப்படிக்குப் பரிசோதித்தாற்
    குணமான சத்ததனிற் செம்பெடுத்து
தேர்ந்துமே எட்டுரெண்டு கொடுத்துருக்கு
    திடமான மட்டத்தைச் சிவக்கக்காய்ச்சில்
வார்ந்துமே பழத்தினுற் பாகமாகும்
    வகையாகப் பழுத்தாக்கால் தங்கந்தன்னைச்
சோர்ந்துமே சேர்க்காதே யாகோபுத்தான்
    சுகமான வித்தையிதைச் சொன்னூர்பாரே. (263)



சொன்னதொரு அடையாள மாய்ப்பழுத்த
சுகமான மட்டத்திற் றங்கஞ்சேர்க்க
நன்னயமாய்ச் செட்டிகையி லேறும்பாரு
நலமாகப் புடத்திலே யிறங்கும்பாரு
பின்னங்க ளில்லாமற் சொல்லிப்போட்டேன்
பேசரிது பேசரிது பெருமைமெத்த
வன்னங்கள் சிலைக்குவந்த வாறுபோலே
வகையாகும் யாகோபு வரிசைதானே. (264)

வரிசையாய்க் கைபாக வரிசையோடே
வகையாகச் செய்தாக்கால் வாதமாகும்
பரிசையாய்க் கைபாகந் தப்பிப்போனல்
பதிவாக யெல்லாமுந் தப்பும்பாரு
புரிசையாய்ப் பிரியமாய்ச் செய்துகொண்டு
பொருந்திடவே நொருக்குவெள்ளி போட்டுப்பாரு
உரிசையாய் நாக்குருசி போலேபாரு
உற்றுணர்ந்து யாகோபு ஓதினரே. (265)

ஓதினர் முன்வேதந் தன்னிற்றானும்
உறுதியாய்ப் பாண்டங்கள் மிகவுஞ்சொன்னேன்
வாதிதான் பார்த்துமிகச் சுட்டுக்கெட்டு
வகையறியா ரதனலே பொய்யென்பார்கள்
கோதியதோர் கிளிபோலே சொல்லிப்போட்டேன்
குவிந்தபடி சொன்னக்கா லென்னசெய்வேன்
போதித்தேன் கைபாக வரிசைதானும்
புகழாக யெல்லோர்க்கும் பெருமைதானே. (266)

பெருமையாய் வாதங்கள் மிகவும்பார்த்துப்
பேசரிய யாகோபு யென்பேராச்சு
அருமையா யுலகத்தில் வாதிதானும்
அடைவாக ஒன்றைவிட்டு ஒன்றைச்செய்து
ஒருமையா யுலகத்தி லிருந்துகொண்டு
ஒன்றிருக்க வொன்றுசொல்வா ருலகவாதி
கருமையாய்ச் செய்வார்கள் தெரியாமற்றான்
காட்டினர் யாகோபு கருச்சொன்னரே. (267)

சொன்னதொரு சாஸ்திரங்கள் பதினேழாகும்
சுருக்கமாய்ச் சொல்லிவிட்டேன் குறிப்பதாக
நன்னயமா யென்பாடல் பார்த்தபேர்க்கு
நானிலத்தில் ரசவாதம் யேவல்செய்யும்
கன்னல்போ லாகுமிது வசனம்பொய்யா
கற்றுணர்ந்தால் எல்லாமுஞ் சித்தியாகும்
பின்னமில்லா மற்சொல்லிப் போட்டேனென்று
பிரட்டில்லா யாகோபு பேசினேனே. (268)

பேசியதோர் மக்காவின் தேசந்தன்னிற்
பிரபலமாம் பெரியோர்கள் மிகவுமுண்டு
வாசினதோர் எளியோர்க ளில்லையில்லை
வகையான நபிமார்கள் மெத்தவுண்டு
மாசில்லா நபிமார்கள் மெத்தவுண்டு
வழியோடே யிருப்பார்கள் நிறத்தைக்கேளு
காசியே செவ்வலரி போலாந்தேகம்
கற்றுணர்ந்த யாகோபு கருச்சொன்னரே. (269)

சொன்னதொரு நூலில்லா வாதம்பார்த்தால்
தோசியவன் பொன்மாத்துக் காணமாட்டான்
நன்னயமாய்ச் சொல்லுவான் பசப்புவான்பார்
நானிலத்தில் மூலிகைக ளிருக்குதென்பான்
பின்னமில்லா மற்றுமே சொல்லிப்போட்டுப்
பிரட்டாக ஒருபொருளை யறியானப்பா
கன்னல்போல் மக்காவின் தேசந்தன்னிற்
கற்றுணர்ந்தேன் யாகோபு கருவிட்டேனே. (270)

அயத் தாம்பூரக்களங்கு

விட்டதொரு களங்கதனைச் சொல்லக்கேளு
விருப்பமாய் நபிமார்கள் ஆடும்நேர்மை
தொட்டதொரு சகலமுந்தான் சித்தியாகும்
சொல்லுகிறேன் கைபாக வரிசையாகப்
பட்டமுடன் சேர்க்குமந்த வாருதன்னைப்
பயமாகச் சொல்லுகிறேன் மார்க்கப்போக்கைத்
துட்டருடன் சொல்லாதே நரகமெய்தும்
தொல்லுலகில் யாகோபு தோய்ந்திட்டாரே. (271)

தோய்ந்திட்ட நபிமாரைப் போற்றிசெய்து
தொல்லுலகில் செம்பதுவுஞ் சுருக்கமாக
வாய்ந்திட்ட கண்டரது செம்பிரண்டும்
வகையான அயம்நேராம் சத்திநேராம்
ஓய்ந்திட்டுக் கல்வமதி லரையன்னத்தால்
உறுதியாய் வில்லைகட்டிக் கதிரில்வைத்துச்
சாய்ந்திட்டுப் போகாமற் புடமுமிட்டுச்
சரியாக வண்டிலதைச் சேர்த்துப்பாரே. (272)

சேர்த்துமே அரைத்துஅன்ன நீரினாலே
செழுமைபெறக் குகையிலிட்டு உருக்கிப்பார்நீ
பார்த்துயெடு சத்தாகும் சத்தின்போக்கைப்
பதியநபி மார்கள்தான் ஆடும்ஆட்டு
சாத்துவீர் வெள்ளிபோ லாகும்பாரு
சத்தியமாய்ச் சத்துநின்ற யிடையேபாதி
கோத்திடுநீ சித்தருட ரூபிதன்னைக்
குணமாய்ச்சே ரென்றார்யா கோபுதானே. (273)

தானென்று சேர்த்துமே கல்வந்தன்னில்
தாட்டிகமாய்ப் பொற்றலையின் சாற்றாலாட்டி
வானென்று வில்லைகட்டிக் கதிரில்வைத்து
வடிவாக ஓட்டிலிட்டுப் புடமூன்றிட்டால்
ஊனென்ற செந்தூரம் உறுதியாகும்
உற்றுணர்ந்து யெடுத்துமே உண்மையாகப்
பானென்று மதியெட்டி லிரண்டுசேரு
பரிந்துமே யாகோபு சொன்னவாறே. (274)

பரிந்துமே மதிதனிலே சேர்த்துருக்கப்
பகராது பொன்னாகும் பொன்னினோடே
வரிந்துமே யேமமது காலுங்கூட்டி
வகையாக உருக்கிப்பார் எட்டுமாத்து
விரிந்துமே உப்புக்குங் காவிக்குந்தான்
மேலாக யிருந்திடுங்காண் உண்மையாகக்
குரிந்துமே பாகமிது குறிப்பைப்பார்த்துக்
கூத்தாடும் யாகோபு குறித்தவாறே. (275)

வாரேது யென்ருக்கால் சொல்லக்கேளு
வண்மைதரும் அயந்தன்னை யுழைத்துப்பாரு
ஊரேது பலன்கொடுக்கும் உறுதியாகும்
உலகத்தில் நபியாக யிருந்துபாரு
கூரேது கந்திரிகள் மிகவுஞ்செய்து
குணமாகக் கொடுத்துமே தருமம்பண்ணிப்
பாரேது பூமிதனி லிருந்துவாழும்
பாக்கியவான் யாகோபு பரிந்தவாறே. (276)

பரிந்திட்ட வுலகத்தோர் பிழைக்கும்நீதி
பதிவாகச் சொல்லிவிட்டேன் பலனும்பார்த்து
தெரிந்திட்ட வுங்களுக்குத் திறமைசொன்னேன்
சித்தர்நபி யாகிடவே முற்றும்பார்த்து
அறிந்திட்டாற் பொருளுண்டு வாதம்உண்டு
அலக்கழித்தாற் பலனென்ன அடுத்துப்பாரு
தெரிந்திட்ட ரசவாதி காண்பான்பாரு
திட்டமா யாகோபு சொன்னதாமே. (277)

சொன்னதொரு நூல்வர்மங் கண்டுபாரு
தொல்லுலகி லிச்செம்பைச் சேருசேரு
நன்னயமாய் ஒருவேலை தெரிந்துதானல்
நாட்டிலே நபிமாராய் நல்கிவாழ்வீர்
சின்னவோர் பிள்ளைக்குந் தெரியும்நன்ருய்ச்
சித்திரமாய்ப் பேசாதீர் சித்திபெற்றுக்
கன்னல்போ லிருக்குமுத்தி சொன்னுரையா
கடிதான யாகோபு கருணைதானே. (278)

தானென்ற சித்தருட நூலுக்குள்ளே
தாட்டிகமாய் வழலையென்றும் முப்பூவென்றும்
ஊனென்ற புளியென்றும் மறைத்துச்சொன்னர்
ஒதினர் கருக்கடைக ளதிகமுண்டும்
பானென்ற பலபேருங் காணமாட்டார்
பத்திசெய்யும் முந்நூறிற் பகுத்துட்பாத்தால்
நானென்ற கண்ணுடி போலேதோன்றும்
நாதாந்த யாகோபு சொன்னவாறே. (27[illegible]

சொன்னதொரு வடமொழியைப் பார்த்துத்தேறி
தொல்லுலகில் வாதிக்குச் சொன்னமார்க்கம்
கன்னலைப்போற் கழறியதோர் செம்புதன்னைக்
காதலா யெடுத்துமே வெள்ளிதன்னில்
இன்னிலத்திற் கொடுத்தறிந்து நபிமாராகி
யிருந்து நீ வாழ்ந்திடவே சொன்ன நீதி
தன்னிகரி லலையாதே பொய்பேசாதே
சவுங்கலாய்த் திரியாதே நூலைப்பாரே. (280)

பாரென்ற நபிமார்க ளென்போர்தானும்
பதிவாக இடங்கொடுத்து வாதமார்க்கம்
காரென்று சொல்லியே கைகொடுத்துக்
கருணைவைத்திவ் வுலகதனிற் சொன்னார்பாரு
வாரென்று கடுவான வாதமார்க்கம்
வகையறியான் துகைபாரான் மாடுமேய்க்கி
ஊரென்று உண்டுடுக்கச் சொன்னமார்க்கம்
உறுதியிது சத்தியமாம் உண்மைபாரே. (281)

உண்மையாய்க் கைபாக வரிசைகண்டால்
உறுதிவரும் நோக்கந்தான் வாதச்சேரும்
தண்மையாய்க் கைபாக வரிசைவந்தால்
தாக்கிடவே லோகமெல்லாம் பழுக்கும்பாரு
வண்மையாய் வாதம்பொய் யென்றுசொன்னால்
வங்கிஷங்கள் பாழாகும் பெரியோர்வாக்கு
எண்மையா யெண்ணியே நினைவிற்பூண்டால்
இன்பமா யாகோபு எழுதினாரே. (282)

எழுதினார் யாகோபு நபிமார்சொல்ல
ஏழைமதி போகாதே யிருந்துபாரு
வழுதியே பரபரப்பாய்ப் பார்க்கவென்றால்
வகையாகக் கைபாக வரிசைகண்டு
உழுதநிலம் பயிரிடுதல் போலேபண்ணு
ஒழுங்காகச் செய்தாக்கா லுறுதியாகும்
அழுதிடவும் வேண்டாங்காண் செம்புதன்னை
அடைவாகச் செய்தாக்காற் பலனுமாமே. (283)

துருசுஅயக் கௌரிக்களங்கு.

பலஞக இன்னமொரு களங்குமார்க்கம்
பாகமாய்ச் சொல்லுகிறேன் பாருள்ளோர்க்குப்
பெலஞக அரைபொடியும் பலமும்பத்து
பேசரிய துருசதுவும் பலமும்பத்து
கலஞகக் கெவுரியது பலமும்பத்து
கனிவாகக் கல்வத்தி லிட்டுப்பின்பு
தலமாக வெலுமிச்சம் பழச்சார்தன்னில்
தாட்டிகமா யிருசாமம் அரைத்திடாயே. (284)

அரைத்துமே வில்லைகட்டிக் காயப்போடு
அடைவாகப் பெரியபுடம் வைத்தெடுத்துத்
தரைத்துமே புதுக்குகையில் வைத்துருக்கத்
தாட்டிகமாய் வண்டிலது கூடச்சேர்த்து
புரைத்துமே உருக்கிடவே சத்துமாகும்
பொருந்துமச் சத்தெடுத்துக் கல்வத்திட்டு
வரைத்துமே கொடியோனைப் பாதிசேர்த்து
வடிவாக அரைத்துகதிர் காயவையே. (285)

காயவைத்துப் புடமூன்றிற் செந்தூரிக்கும்
கனகமென்ற செந்தூர மெடுத்து நீயும்
நாயன்மார் சொற்படிக்கு வெள்ளிதன்னில்
நாட்டிடவே யெட்டிரண்டு தான்தெரிந்து
மாயவே உருக்குமுகந் தன்னைப்பாரு
மதிபழுத்த வாறதனை யென்னசொல்வேன்
சாயைபோல் வெகுசாயம் யிந்தவித்தை
சரியான பாகமிது தண்மைபாரே. (286)

தண்மையாய்க் களங்கமதைச் செந்தூரித்துத்
தாட்டிகமா யுண்டிடவே மேனிதங்கம்
உண்மையிது சத்தியமா முற்றும்பாரு
ஒருவருடன் சொல்லாதே உண்மைசொன்னேன்
வண்மையிது பேசவில்லை மகத்தாஞ்சித்தர்
வாய்திறக்கா வசனத்தைச் சொல்லினேன்யான்.
கண்மையாய்ப் பார்த்துணர்யா கோபுசொன்ன
கருத்தையா னுங்களுக்குக் கருதினேனே (287)

கருதியே கற்றுணர்ந்த பெரியோர்பாதம்
கவலையற்றுப் பாதமதில் விழுந்துதேறு
வருதியே பழுதுமது வரமாட்டாது
வாழ்த்தியே விடைகொடுப்பார் வணக்கமுள்ளார்
உறுதியா யுலுத்தவரும் சொல்லுவார்பார்
ஓகோகோ உண்மையிது உற்றுப்பாரு
பருதிகண்ட பனியதுபோ லாகும்பாரு
பரம்பொருளாம் யாகோபு பயின்றவாறே. (288)

பயின்றிட்டே னின்னமொரு களங்குகேளு
பதிவான நபிமார்க ளாடுமாட்டு
உயின்றிட்டே னுலகத்தோர் தனக்குத்தானும்
உறுதியாய்ச் சொல்லுகிறேன் உற்றுக்கேளு
வயின்றிட்ட பாகத்தை யறியாமூடர்
வடிவாகச் சாஸ்திரத்தைப் பொய்யென்பார்கள்
நயின்றிட்ட நபிமார்கள் ஆடும்நேர்மை
நாதாந்த யாகோபு நலஞ்சொன்னாரே. (289)

பஞ்சமுகக் களங்கு

நலஞ்சொன்ன ரஞ்சுமுகக் களங்குதானும்
நாடியே பொருளைத்தான் நாடிச்சொல்வேன்
பலமாகத் தகடடித்து வையகத்திற்
பதியபழச் சாறுங்கற் காவியிட்டுப்
பிலமாக அரைத்துமே தங்கத்தப்பிப்
பிசகாமல் ஏழுதரங் காய்ச்சிப்போடு
அலமாகச் செம்புதனைத் தகடுதட்டி
ஆதியாம் வடந்தன்னைச் சேர்த்திடாயே. (290)

சேர்த்திடவே வெடியுப்புச் சீனம்நேராய்த்
திறமாகச் சேர்த்துமே கத்தம்நீரில்
பார்த்திடவே அரைத்துநீ குழப்புபண்ணி
பதிவாகச் செம்புதனைக் கரியோடிட்டு
நார்த்துமே யேழுதரம் பழுக்கக்காய்ச்சி
நலமாக ஏழுதரங் காய்ச்சித்தோய்ப்பாய்
கார்த்துமே கரியுப்புக் குகையிலிட்டுக்
காரியமா யுருக்கியே சொல்லக்கேளே. (291)

சொல்லவே கன்னியாங் குமரிச்சாற்றிற்
றேன்றவிரு பத்தியொரு தரந்தான்சாய்த்து
நல்லவே யெடுத்ததனைப் புறம்பாய்வைத்து
நாடியே யதன்பின்னே நடப்புக்கேளு
கல்லவே நாகமது குகையிலிட்டுக்
கரயாக வுருக்கிமெள்ள இலுப்பைநெய்யில்
தள்ளவே இருபத்தோர் தரந்தான்சாய்த்துத்
தண்மையா யாகோபு சாற்றினரே. (292)

தண்மையா யெல்லாமுஞ் சுத்திபண்ணி
தாட்டிகயாய் ஒவ்வொன்றும் யிடைநிறுத்து
உண்மையாய் ஒன்ருக வுருக்கிக்கொண்டு
உறுதிபெறத் தகடடித்து அதன்பின்கேளு
வெண்மையாய்ச் சத்தியுடன் சூதஞ்சேர்த்து
விரைவாகக் கல்வமிட்டு யெருக்கம்பாலால்
வண்மையா யரைத்துமே கவசங்கட்ட
மகிழ்வாயா கோபுசொன்ன வரிசைதானே. (293)

வரிசையாய்க் கட்டிகதிர் காயவைத்து
வடிவாகப் புடப்போடு கரியதாகும்
கரிசையாய்க் கல்வத்தி லிட்டுக்கேளு
கணக்காகக் கொடியோனைப் பாதிசேர்த்துப்
பரிசையாய்ப் பொற்றலையின் சாற்றிலாட்டிப்
பரிவாகக் கரியில்வைத்துக் காய்ந்தபின்பு
உரிசையாய்ப் புடப்போடு கருத்துதானல்
உற்றுமே பின்பொருக்கால் மருந்துசேரே. (294)

மருந்துமே சேர்த்துநீ முன்னீர்தன்னில்
மதிபெருக அரைத்துமே வில்லைகட்டி
விருந்துகதிர் காயவைத்துப் புடமூன்றிட்டால்
விதமான செந்தூரம் முருக்கம்பூவாம்
வருந்துவிடும் நவலோகம் நூற்றுக்கொன்று
வடிவாக இட்டிடவே தங்கமாகும்
அருந்திந்தத் தங்கந்தா னருமைமெத்த
ஆதியாய்ச் சொன்னதிந்த அடவுதானே. (295)

அடைவாகப் பணவிடைதான் மண்டலத்தில்
ஆண்மையுட னுண்டிடவே மேனிகல்தான்
நடவான் கைப்போடு புளிப்புந்தள்ளு
நாடியே உண்டிடவே நயக்குந்தேகம்
படபடத்துத் திரியாதே பதனமாகப்
பார்த்திட்டால் சித்தியாம் பரிவுமெத்தத்
திடமாகப் பார்த்துணர்யா கோபுதானும்
தேசமெய்க்கச் சொன்னதிந்தத் தெளிவுதானே. ( )

தெளிவாகப் பஞ்சமுகந் தன்னைப்பார்த்துத்
தேறினல் வாதமது கோடாகோடி
அழிவான புத்தியினற் பெண்ணைச்சேர்ந்து
ஆடியே திரிந்தாக்கால் லாபமென்ன
சுழிவான நரகம்வருங் கண்டுகொள்ளு
சூட்சத்தா லாய்ந்துயா கோபுசொன்னர்
விழியானைக் கண்டவுடன் கொர்ச்சிக்காதே
வேதாந்த முடியவரும் வாதந்தானே. (297)

வாதமென்ன கொஞ்சத்திற் கிடைக்குமோதான்
வடிவான சடயெடுத்த நேர்மையாலே
சூதமென்ன யெளிதாகக் கட்டுமோசொல்
சுருதிதனை ஆராய்ந்து துருசுச்சுண்ணம்
பாதமது பட்டாக்கால் கெவுனபோடும்
பழுவாதஞ் செய்தாக்காற் கட்டமாட்டா
வேதத்திற் சொன்னபடி கண்டுசொன்னேன்
வித்தகரே பார்த்துணர்ந்தால் எண்மையாமே. (298)

எண்மையாய்க் களங்குசெய்து களங்குதன்னை
எளிதாகக் கொடுத்தாக்கால் பாயமாட்டா
வண்மையாய்ச் சிதறிவிடும் உருப்படாது
வகையென்ன வாதங்கள் பொய்யென்பார்கள்
உண்மையா யிருப்புசெம்பு சுத்திசெய்து
உருப்படுத்தும் கங்கமா யென்னசொல்வேன்
தண்மையுற்ற சிற்சிலபேர் புத்தியில்லார்
தாழ்ச்சிமிகச் சொல்லுவர்க ளுலகத்தோரே. (299)

உலகத்தில் வாதமொடு குளிகைபொய்யோ
　　உழைத்தாக்கால் ரசவாதம் சித்தியாகும்
பலகற்றுப் பலமாக நீதிநூலைப்
　　பகுத்துணர்ந்து பார்த்துமே வேலைசெய்து
நிலமுழுதால் பயிராகும் வித்தைபோல
　　நீசெய்தால் லாபம்வரும் நிசமதாகும்
சலமீட்டால் நோயேகும் பேய்கள்போகும்
　　தாக்கினால் மருந்ததுவின் தண்மையாமே. (300)

தண்மையாய்ச் சுடர்க்கொடியோன் தன்னைத்தானும்
　　தாக்கிடவே சித்தியாந் தன்மைமெத்த
உண்மையாய்ச் செம்பாகுஞ் செப்புதன்னை
　　உத்துயெடு மதிதனிலே வேதையாகும்
வண்மையா யுண்டுடுத்த லாகும்பாரு
　　வழிபெருகும் நபிமார்கள் சொன்ன நீதி
கெண்மையா யொன்றுவிட்டு ஒன்றுசெய்தால்
　　கெட்டுவிடுஞ் சொற்பேசாற் குறையுந்தானே. (301)

குறையாமல் மக்காவின் தேசந்தன்னில்
　　குருநபிமார் மெத்தவுண்டு கோபம்மெத்த
வறையாக வாதமுண்டு அடியேன்போனேன்
　　வழியறிந்து அடித்தார்கள் அடியும்பட்டேன்
நறையாக வாதங்கள் மிகவுஞ்சொன்னா
　　நான்கற்று நாட்டில்மூந் நூறுதானும்
துறையாகச் சொல்லிவிட்டேன் யாகோபென்பேர்
　　சுருக்கயெழு நூறுஞ்சோ திக்கிப்பாரே. (302)

சோதித்தேன் தம்பிரான் செயலினாலே
　　சுருதிபெற இறசூலின் துணையைப்பற்றி
வாதித்தார் இறசூலும் வண்மையாக
　　வகையான முகம்மதுவைக் கண்டுபோற்றி
சாதிபல தன்மைவிட்டு நபிமாரைத்தான்
　　சரித்திரத்தை விளங்கியே முக்காற்சென்று
ஓதித்தேன் முக்காலுந் தொழுதுபோற்றி
　　ஓதரிய மூந்நூறும் முற்றுமாமே. (303)

யாகோபு வகாரக்களங்கு 300 முற்றிற்று.

இராமதேவரென்ற

## யாகோபு முனிவரின் வரலாறு.

---

இம்முனிவர் ஆதியில் பதினெண் சித்தர் கூட்டங்களுடன் இராமதேவரென்ற பெயருடனிருந்து கற்பம், நிகண்டு, வைத்தியம், ஞானம். கரிசல், தைலம், மாந்திரீகம், ஜாலம், முதலிய இன்னும் அநேக நூல்கள் பாடியபின் கெவுன குளிகையிட்டு ஆகாயத்திலெழும்பி ககன மார்க்கமாய் மக்கா தேசத்துக்குப் போய்ச் சேர்ந்து அங்கு மகமதியர்களில் குருவான நபிமார்களுடன் தமிழ்சாஸ்திரத்திலும் மகமதியர் சாஸ்திரத்திலும் உள்ள ரகசியங்களைக் கலந்து பேசி அதில் முக்கியமான அகாரம், உகாரம், என்பதும், அசன், உசன் என்பதும் இன்னதெனப் பேசி உறுதிபெற்று நபிமார்கள் சந்தோஷமடைந்து இராம தேவருக்கு மகமதியர் சாஸ்திரப்படி சுன்னத்துச் செய்து யாகோயெனப் பெயரிட்டு தொப்பியுங்கொடுத்து மகமதியர் மதத்தில் சேர்த்துப் பள்ளியில் வைத்துக் கொண்டார்கள் யாகோபு யெனப் பெயரானபின் சித்தவைத்தியம், யூனானி வைத்தியம், ஆயுள்வேத வைத்தியம் முதலான முறைகளை அனுசரித்து யாவரும் எளிதில் உணரும்படியாய் முதலில் யாகோபு சிந்தாமனி 700 என்ற சாஸ்திரத்தைப்பாடி 'அதில் வைத்தியர்களுக்காக அநேக முறைகள் லெகுவாக அருத்தம் பண்ணிக்கொள்ளவும். மருந்துகள் செய்து முடிக்கவும் சீக்குகளை குணமாக்கு விதங்களும் வாதமுறை கண்டிப்பாய் முடியுமென நிச்சயமான நூல்களைப் பாடியிருக்கிறார். ஷை யாரால் ப்ள்ளியிருந்து பாடிய பதினேழு சாஸ்திரங்களும் கிடைக்கப் பெற்று இப்பொழுது அச்சிட்டிருக்கிறது.

குறிப்பு:—யாகோபாக யிருந்தபின் அகஸ்திய முனிவரால் இந்த யாகோபு முனிவருக்கு தேரையரெனப் பெயர் உண்டானதாகத் தெரிகிறது.

உ பரமபதி துணை.

புதிதாய் அச்சிட்டிருக்கும்

# அகத்தியர் சாஸ்திரங்கள்.

| | | ரூ. | | |
|---|---|---|---|---|
| 1. | அகத்தியர் பரிபூரணம் 1200 | 2 | 0 | 0 |
| 2. | ஷை மணக்கோலம் 200 | | | |
| 3. | கனகமணி 100 | | | |
| 4. | வயித்தியக் கோவை 125 | | | |
| 5. | வயித்தியத் திரட்டு 81 | | | |
| 6. | கிறுக்கு சாஸ்திர மென்னும் கிரிகை நூல் 64 ஆக 5 சாஸ்திரங்கள் சேர்த்து | 1 | 4 | 0 |
| 7. | ஷை கௌமதி நூல 400 | 1 | 4 | 0 |
| 8. | ஷை தற்க சாஸ்திரம் 309 | 0 | 14 | 0 |
| 9. | ஷை கற்ப முப்புக் குருநூல் 100 | | | |
| 10. | மனோன்மணி தீட்சை 100ம் | | | |
| 11 | நாற்பத்து மூக்கோணபூசை 41ம் சேர்ந்தது | 0 | 14 | 0 |
| 12. | ஷை பூரண சூஸ்திரம் 216 | 0 | 12 | 0 |
| 13. | ஷை பூரணம் 205 | | | |
| 14. | ஷை சூத்திரம் 21 ம் சேர்ந்தது | 0 | 12 | 0 |
| 15. | ஷை பரிபாஷை 300 | 0 | 12 | 0 |
| 16. | ஷை பன்னிரு காண்டம் 200 | 0 | 12 | 0 |
| 17. | ஷை பூஜா விதி 200 ம் | | | |
| 18. | ஞானசைதன்யம் 51 சேர்ந்தது | 0 | 12 | 0 |
| 19. | ஷை வகார சூஸ்திரம் 200 | | | |
| 20. | ஷை சுருக்கம் 100 சேர்ந்தது | 0 | 14 | 0 |
| 21. | தத்துவம் 300 | 0 | 14 | 0 |

---

| | | | |
|---|---|---|---|
| தமிழ்ச் சித்த வைத்திய அகராதி | 2 | 8 | 0 |



இன்னுமனேக சித்த வைத்ய சாத்திரங்களு மிருக்கிறது வேண்டியவர்கள் நேரிலும் தபால் மூலமாயும் பெற்றுக் கொள்ளலாம்.

**இ. ராம. குருசாமிக் கோனார் சன்,**

புக்ஷாப் புதுமண்டபம், மதுரை.

